ஸ்ரீ

ஸ்ரீராமஜெயம்.

# பத்தாநாள் யுத்தமாகிய
# பீஷ்மர் சண்டை.






சூளை - முனிசாமி முதலியாரவர்களால்

சென்னை

ஸ்ரீ ஆதிமூலம் அச்சுக்கூடத்தில்

பதிப்பிக்கப்பட்டது.

இதன் விலை] 1923. [அணா 6.

ரிஜிஸ்டர் காபிரைட்.

...ப்ப நாய்க்கன் தெரு, சூளை, மதராஸ்.

ஸ்ரீ

ஸ்ரீராமஜெயம்.

பாரதப்போரில்

பத்தாநாள் யுத்தமாகிய

# பீஷ்மர் சண்டை நாடகம்.






சூளை—முனுசாமி முதலியார்

அவர்களால்

சென்னை,

ஸ்ரீ ஆதிமூலம் பிரஸில்

பதிப்பிக்கப்பட்டது.

இதன் விலை] 1923 [அணா-6

ஸ்ரீ
ஸ்ரீ ராமஜெயம்.

பாரதப்போரில்
## பத்தாநாள் யுத்தமாகிய

# பீஷ்மர்சண்டை நாடகம்.

### விநாயகர் துதி-விருத்தம்.

சீர்பெறும்பத்தாநாளில் ஜெகமணிபீஷ்மாச்சாரி
பேர்பெரும்சமர்க்களத்தின் பொற்புகழ்சரித்திரத்தை
யேர்பெரும்தமிழினலே யின்பநாடகமாய்ப்பாட
கூர்பெரும்கரிமுகத்தோன் குஞ்சிவபாதங்காப்பே.

### தேவவணக்கம் ஆசிரியவிருத்தம்.

ஜெகமெலாம்வணங்கும் பீஷ்மரைவிஜயன்
சிகண்டியைதன் முன்னேநிறுத்தி
ஜெயமதுசெய்த பத்தாம்போர்தன்னை
செப்பவும்நாடகமாக
பகளொளிவேண்டா மரையுருவாணி
பாதமேஅடியிணைபோற்றி
பச்சைமாமயிலில் யேரியமுருகன்
பற்பலரடியிணைபோற்றி
சுகமுருகோலிய நல்லுருமாரி
சுகுர்தபொற்பாதமேபோற்றி
சுந்திரசாலை சீனிவாசையன்
துணையடிக்கடியவன்போற்றி
கோவுருபானும் பட்டினிலமர்ந்த
யெழிலானருகவமூர்த்தி
இணையடிபோற்றிகவிசொலும்புலவன்
யின்பவைத்தாளுநீர்போற்றி.

### கலித்துறை.

வேதாந்தமீதுவிளங்கும் பரஞ்சுடரே
ஆதாரம்நீயேஅடியிணைப் பாதமடைக்கலமே,

விநாயகர்வருகிற-கவி.

சீதாதேவனுக்குத் திருமருமகனய்வந்த
போகமுமுகமிலங்கும் புரிசடைமிகத்துலங்க
மாதவக்கணங்கள்சூழ வல்லபைபாகனை
காதலாய்சாலைவாசக் கணபதிவருகின்றாரே.



கணேசர்வருகிற-தரு.

வேதக்கணநாயகர்வந்தார் சுந்திரரூப
வேதக்கணநாயகர்வந்தார்

வேதக்கணநாயகர் மெல்லிவல்லபைபாகன்
பூதக்கணங்கள்சூழ பூரியெங்குமுழங்க வே

தந்திமுகப்பிரகாசன் சகலதேவர்க்கும்நாதன்
தொந்திவயரசைய சுருதிநடனப்பாதன் வே

ஐந்துகரமிலங்க ஆகுவாகனமேறி
இந்துவேணியன் தந்த யிலங்கும்கருணாகரன் வே

சாலைநகரில்வாசன் சங்கரிமகிழும்நேசன்
ஞாலம்புகழ்பத்தாம்போர் நாடகத்துக்கருள்செய்ய வே

பொது-வசனம்.

இவ்விதமாக கடவுள் திருவருளிலே அடியேன் சொல்லப்போ
கிறதென்னவென்றால் பாண்டவாளும் துரியோதநாதிகளும் பதினெ

ட்டுநாள் சண்டைநேமித்து நேற்றியதினம் ஒன்பதாநாள் சண்டை முடிந்து யின்றுபத்தாநாள் சண்டையானதால் அவாளவாள்காலக் கடன்களைமுடித்து யுத்தக்கோல விருதணிந்து துரியோதனராஜன் சண்டைசெய்யும்படியாக ரணக்களம் நாடிவருகிரவிதங்காண்க.

துரியன்வருகிர-கவி.

அணிவிருதுபலபணிகள் நெருங்கிவந்த
அதிரதரும்சமரதரும் அணிந்தோரெல்லாம்
கணிதமரக்குருக்ஷேத்திர மடைந்தாலென்ன
கர்ணநில்லாசண்டையது கலங்கியோட
பணிவிருந்துபாண்டவர்கள் திடத்தாரென்று
பலனொடுங்கி நலமொடுங்கிபரதவித்து
துணிவுடையதம்பியரும் சகுனிசூழ
துரியபதிகொலுவாக வருகின்றானே.



துரியன்வருகிர-தரு.

ராஜதுரியராஜன்வந்தா — னிதோ
ராஜதுரியராஜன்வந்தா — னிதோ
நேசமானதம்பிமாரும் — சகுனிசூழ
நீண்டபூமிமன்னர் — வந்துமுடிகள்சூழ சுரு

நேத்திரமில்லாத சூஸ்த்திரதந்தையும்
சாத்தியவாசகம் யேத்துக்கொள்ளாத ராஜ

தவளமணிபூசக்ரக் குடைகவிக்க
பவளமணிவச்சிர பதக்கம்மார்பில்ஜொலிக்க சரு

பாரமணிகள்காலில் வீரமணிகள்கொஞ்ச
தீரமிஞ்சியேவந்த சூரசூரர்களஞ்ச ராஜ

காலதண்டமும்சூலம் கையில்தனுவெடுத்து
வேலும்பாலாவும்வெத்தி விருதுவல்லயம்தொடுத்து சரு

விந்தையாய்முரசுகள் அந்தரபேரிகை
சுந்திரமாகவே திந்திமிதிமியென ராஜ

யீடில்லாதகர்ணன் யில்லாசண்டைகெலிக்க
வாடாமலேநமக்கு வருமோஜெயம்பாலித்து சரு

மண்டலம்நடுங்கவே அண்டிஅவனைக்கண்டு
கொண்டுமேமனந்தேரி சண்டைசெய்வோமென்று ராஜ

துரியன்-கவி.

ஆரம்பம்தனிலேவந்து அதிபெலகர்ணராசன்
பாரெந்தன்பாட்டன்பேரில் பகைகொண்டுபோனபின்பு
யேரம்புகொண்டுஜெவர் யெட்டாளுளாகச்செய்யும்
கோரங்கள்தன்னைக்கண்டு குமுருதேநெஞ்சந்தானே.

துரியன்-வசனம்.

கேளும்சகுனிமாமா யுத்தஆரம்பகாலத்தில் தன்னைநாலாம் பிரிவில்சேர்த்த பீஷ்மாச்சாரிசாகிரபரியந்தம் தன்கையில்வில்லெடுத்துயுத்தம்செய்கிறதில்லையென்றுகர்ணராஜன்சபதம்கூறிப்போனயெட்டுதினமாகபாண்டவாள் மிஞ்சிசண்டைசெய்யும்படியான கோரத்தைக்கண்டுயெனது நெஞ்சம்வுருகுதேயென்னசெய்வேன் மாமா சகுனிமாமா.

துரியன்-தரு-தர்க்கம்.

இந்தவிதிக்கிரான்யென்னசெய்குவேன் மாமா-யெந்தன்நேமா
காம்யெடுத்துசொல்லக்கர்ணன் அடுத்துசண்டைக்குவருவானோ

சகுனி-தரு.

வருவதேதுகர்ணன்மருத்துசபதந்தப்பி மன்னா-ராஜமன்னா
வாடித்தவிப்பதென்னகூடிநாங்களிருக்க மன்னா-ராஜமன்னா

துரியன்-தரு.

இருக்கயிருக்கஜவர்யீடில்லாசண்டைசெய்து மாமா-சகுனிமாமா
எங்கும்பிணக்களமாய்மங்கமடித்தாரையோ மாமா-சகுனிமாமா

சகுனி-தரு.

மடித்தஐவரையினிமட்டில்விடுவதுண்டோ மன்னா-ராஜமன்னா
மயங்காதேவெகுசேனைசெயந்தரயிருக்குறோம் மன்னா-ராஜமன்னா

துரியன்-கவி.

ஒருதினந்தனிலேசுவேதனால் ஒழிந்ததுநாலக்ரோணி
மருதினந்தனிலேவீமன் மடித்ததுகொஞ்சமல்ல
வருதினமாருக்குள்ளே மடிந்ததுநமதுசேனை
கருதிநாமரியவேண்டி கர்ணனைவரச்செய்வாயே.

துரியன்-வசனம்.

கேளும்மாமாவே சண்டைதுவக்கியமுதல்நாளில் தருமருக்குச் சேனாதிபதியாகிய சுவேதனாலே நாலக்ரோணிசேனை மடிந்துப் போய்விட்டது மருதினம்சண்டையில்வீமனாலே அனேகம்சேனை மடிந்துவிட்டது மற்றயிருதினச்சண்டையில் வெகுசேனைகள்மாண்டது ஆகஆரக்ரோணிசேனைகள்மாண்டு நமக்குஐந்தக்ரோணிசேனையிருக்கின்றது பாண்டவாளுக்குஆரக்ரோணி சேனையிருக்கின்றதே மேல்கீழாச்சுதே கீழ்மேலாச்சுதே யெப்படிமனம்பொருப்பேன் ஐயையோ கர்ணமகாராஜன் யில்லாதசண்டையென்ன சண்டையிப் பவும்அங்கு தேசாதிபதியாகிய கர்ணபூபனைநமது கொலுவுக்கு அழைத்துவாரும் சாரணர்களே.

கர்ணன்வருகிர-கவி.

சூரியன்மகிழ்ந்தளித்த துலங்கியமானைப்போலே
வீரியம்படைத்ததீரன் விரும்பியேசேதிகேட்டு
பாரியமகுடமின்னப் பலபணியலங்கரித்து
பேரிகைமுரசுபாடப் புரப்பட்டான்கர்ணராஜன்.



கர்ணன்வருகிர-தரு.

தீரனுங்கர்ணபிஷேகன்வந்தேன் நல்ல
தேவருமுச்சிதயாவருமெச்சமே தீரனுங்
சீலமணிசித்திரலோலன் மேலாகயுதித்தபாலன் சரு

தேடவேதூரியவன் நாடிமகிழவும்
நீடியேகர்ணனும் கூடியன்பாக தீரனு

தேசமெச்சியப்பிரதாபன் வெகு
சுந்தரம்பெருகிய வித்தியதாக
ராஜனனைவருக்குப் பூபன்
வீசாவீசாவெளிதீரன் பேசாவெனுபெருகியமாரன் சரு

வித்தகமாமணி ரத்தினகோமணி
சத்தியசந்தனன் உத்தமனுன தீரனு

ஆடும்பாதமணிகள்கொஞ்ச மிக
தாவியேநடந்துமே காவலர்சூழ
நாடும்புலிகளெல்லா மஞ்ச
வாடாமனம்வாடவும் ராஜன்
தேடாமனம்தேடவும் நேசன் சரு

மங்களமாகவே நங்கயர்யிருபுரம்
செங்கரம்கவுரிகள் நங்கியேவீச தீரனு

வீராதிவீரர்கொண்டாட நல்ல
ஊர்வசிபோலவே பேர்மிகபரவிய
சீரானகன்னியர்க ளாட
மாருப்புகழ்தானவிருைதன் தேருகியமாரனுமீதன் சரு

வஜ்ஜிரநீலமும் பச்சையிலங்கிட
உச்சிதநவசமும் கச்சையுமிலங்கிட தீரனு

கர்ணன்-கவி.

வேதனும்படைக்கும்பூமி விருதுமன்னவருக்கெல்லாம்
நாதனய்வந்தயெந்தன் நல்லயென்தம்பிவாவா
காதலாயென்னையிந்தக் கனசபைதனிலழைத்தாய்
தாதவிழ்மாலைமார்பா சங்கதிதெரிவிப்பாயே.

கர்ணன்-வசனம்.

பிர்ம்மாவால் சிருஷ்ட்டிக்கப்பட்ட உலகத்து வேந்தருக்கெல்லாம் கோமானுகத்தானே விளங்கிய தம்பி துரியோதன யிவ்விடம் யென்னை வரும்படிசொன்ன சங்கதியை தெரியும்படியாகச் சொல்லும் தம்பி துரியோதன.

துரியன்-கவி.

மலையில்லாவனத்தைதப்போலும் மலரில்லாகாவைப்போலும்
அலையில்லாக்கடலைப்போலும் அண்ணுவேநீயில்லாதால்
புவியில்லாதுரவைப்போலும் போச்சுநமதுசேனை
சலியாமல்யெந்தன்பின்னே சமருக்குவருகுவாயே.

துரியன்-வசனம்.

நான் மலைகளில்லாதவனங்கள்போலவும் புஷ்ப்பமில்லாத பூங்காவனம்போலவும் அலையில்லாத சமுத்திரம்போலவும் நிலையில்லாத சேனைகளழிந்து புலிகடந்த துரையைப்போலும் நமது சேனைகள்மடிந்தும் பாண்டவாள்சேனைகள்மேலிட்டுயிருப்பது யிப்போது நீர் யென்னுடைய வாக்கியத்தைத் தட்டாமல் யெங்களுடனேகூடி சண்டைக்கு வரவேண்டும் அண்ணவே.

கர்ணன்-கவி.

சல்லாபவரசேவீஷ்மர் சாகுரவரைக்கும்கையில்
வில்லாசைவிட்டேனென்று விண்ணவரறியச்சொன்னேன்
எல்லாம்நீதெரிந்திருந்தும் யெனக்கோதவந்ததென்று
நில்லாதேதாசொன்னசத்யம் நிலையதுதவரிடேனே.

கர்ணன்-வசனம்.

கேளும் யெனக்குப்பிரியமுள்ள துரியோதன முன்னனிவரிசைபிரிவுகாலத்தில் யென்னை அந்தபீஷ்மாச்சாரி யிழிவாகச்சொ

ல்ல அவர் சாகிரபரியந்தம் யென்கையில் வில்லெடுத்து உபித்தியம் செய்கிரதில்லை யென்று நான் சபதம்செய்து வந்திருக்க அதுவுமக்குத் தெரிந்திருந்தும் யென்னை எப்படி அழைக்கவந்தாய் நான்சொல்லிய சத்தியம் தவரி நடப்பதுண்டோ சொல்லும் தம்பி துரியோதனா.

துரியன்-கர்ணன்-தர்க்கம்-தரு.

நம்பினேனுனுன்னை நம்பினேன்
நம்பினேனான்யிந்தகாலம் தெம்பழிந்துசேனைமாள
யின்பந்தானேவுந்தனுக்கு அம்பலத்தில்நான் தவி நம்பி

கர்ணன்-தரு.

மன்னவாராஜமன்னவா தம்பி
மன்னவாநான்யென்னசெய்வேன் யென்னமோவிதியெனக்கு
பன்னியேசபதம்செய்து உன்னைநான்பிரியவானேன் மன்

துரியன்-தரு.

கண்டேனேகாக்ஷிகண்டேனே அண்ணா
கண்டேனேயிதுகாலமாய் அண்டியேயுனைபிரித்து
மண்டலத்தையாளஐவர் சண்டையிலினைக்கலாச்சே கண்

கர்ணன்-தரு.

எப்படியிதற்கெப்படி தம்பி
எப்படிவருவேன்மன்னா செப்பியேஉருதிதன்னை
தப்பியேநடந்திடவும் அர்ப்பரும்துணிவதுண்டோ எப்ப

துரியன்-கவி.

செப்பியசபதந்தன்னை தீரனேயிந்தவேளை
தப்பியேநடக்காவிட்டால் தருமரும்ஜெயமடைந்து
அப்பவேயுலகமெல்லாம் ஆள்வதுநிஜமென்றெண்ணி
இப்பவேசமருக்கேக யெத்தனம்செய்குவீரே.

துரியன்-வசனம்.

அண்ணா கர்ணமகாராஜனே நீர்யிட்டசபதத்தை பழுதாக்கி யிப்போதுதுணிந்து சண்டைக்குவராவிட்டால் அப்பவே பாண்டவாள் பரவிவெற்றியடைந்து யிவ்வுலக மாதியந்தமும் அவர்களே கைக்கொள்வார்கள் அதுவுண்மை நீர் நன்றாகயோசித்து யிப்பொழுதே சண்டைக்குபுரப்படும் அண்ணா கர்ணமகாராஜனே.

கர்ணன்-கவி.

மூலியம்தெரிந்தமன்னு மொழிந்தசொல்லுரிதிதம்பி
சாலியசெங்கோல்பூமி தவிழ்ந்தாலும்வரவுமாட்டேன்
காலியம்போலேபீஷ்மர் கவ்வினல்அருகுதன்னை
ஆலிசமில்லாமலிப்போ அமர்செய்யவருகுவேனே.

கர்ணன்-வசனம்.

கேளும் துரியோதனமகாராஜனே சண்டையில் நடக்கும் மூலியம் யெனக்குயாவற்றும்தெரியும் உன்னுடைய சீர்மைசெங்கோல் பூமிகளெல்லாம் யின்றோடு யிழந்துபோய்விட்டாலும் யென்சொல்லுரிதிதவரிநடக்கமாட்டேன் நான்சண்டைக்குவருகிரவிதம் ஒன்றுண்டு அது யென்னவென்றால் அந்த வீஷ்மாச்சாரியானவர் பசுவைப்போலே நாலுகாலால்நடந்து புல்லை வாயினல் கௌவும்படிக்கிச் செய்தால் நான் சண்டைக்குவருவதற்கு யாதொருதடையுமில்லை தம்பி துரியோதன.

துரியன்-தரு.

பாட்டனை பசுவுருவாய்த்து காட்டுபுல்லைகௌவுமென்று
பயமற்றெப்படிசொல்லுவேன் அய்யய்யோஅண்ணு சுரு

பக்ஷமாகவே கக்ஷிபேசவும்
யிஷ்ட்டமோயிது ரக்ஷித்தாளுவாய் பாட்ட

கர்ணன்-தரு,

வாதனைத்தீரவேபாட்டன் ஒதும்புல்லைகவ்விவிட்டால்
வரிசிலையெடுப்பேனுனும் குணசீலா-மன்னு சுரு

மண்டலாதிபர் அண்டர்காணவே
கொண்டசத்தியம் விண்டுசொல்வனே வாத

துரியன்-தரு.

எத்தனைசொன்னுலும்பாட்டன் பத்தியர்யிந்தவார்த்தையை
ஒத்துக்கொள்வாரோயிது தெரியாதோஅண்ணு சுரு

யேத்துக்கொள்ளாத வார்த்தையேதுக்கு
பார்த்துயென்னிடர் மாத்தவல்லையே எத்த

கர்ணன்-தரு.

ஆண்டவுலகமெல்லாம் பாண்டவர்கைக்கொண்டாலும்
அமர்க்களம்வந்திவில்லை யெடுப்பேனேமன்னு சுரு

ஆசைவைத்தமே பேசியேமனம்
கூசலாகுமோ ராஜதீரனே ஆண்ட

துரியன்-வசனம்.

கேளும்அண்ணுவே நீ சொல்லியபடிவீஷ்மறைக்கேட்டுக் கொண்டுவருகிறேன் உத்திரவுதாரும்அண்ணுவே.

கர்ணன்-வசனம்.

ஆனுல்அப்படியேபோய்வாரும் துரியோதனமகாராஜனே.

வீஷ்மர்வருகிர-விருத்தம்.

நெடியமணிமுடிவேந்தர் வேந்தரெல்லாம்
நேசமுடன்முறைமுறையாய் வந்துபாதம்
தாசமென்றுவந்து அடிபணிந்துநிர்க்க
தகமையாய்முடிமகுடம் அலங்கரித்து
தேகமதில்யெண்ணுன்கு விருதுபூண்டு
தீரமுள்ள துரிமனேயுங் காணவேண்டி
பாரமுள்ளபகைமுடிக்க ஜிகண்டிநாளை
பகைத்தோடிவந்தெதிர்த்தால் கொல்வேனென்று
நாள்பொழுதுவிடியுதென்று வீஷ்மாச்சாரி
நாடிநார்துரியன்சபை தேடிவாரார்.



வீஷ்மர்வருகிர-தரு.

அதிரூபமணிசித்ர
அதிபெலவீஷ்மர்வந்தார்

அழகுக்கழகாய்வந்த
நல்லதிருமுகசூந்திர அதி

மதிகுலம்தழைத்திட மன்னர்மன்னனுகவே சரு

வந்துமேபரிமன கந்தியை தந்தைக்கு
தந்துழுவாசையை சிந்தைதவையாதே அதிரு

சத்தியம்தவராத தரணிப்பிரதாபதீரன்
சுற்றிலுமரசர்கள் சூழும்புகழ்கெம்பீரன் சரு

சூரியன்வொளிமுடி மீறியபணிகளும்
பாரியசிலைகரம் வீரியத்துடனே அதிரு

இடிமுரசுகள்பேரி எங்கும்கிடுகிடென்ன
கொடிவரிசையாய்த்தேரும் கோடிகோடிகளென்ன சரு

கூடியபடைகளும் ஆடியகரிபரி
நாடியேவருகவே யீடில்லாதீரன் அதிரு

வீரவெண்டயங்காலில் விருதுக்கொடிபரக்க
ஆரமோகனமாலை அதிகப்பணிசிரக்க சரு

அம்புவிமன்னரும் ஒன்பதாம்நாளிலே
இன்பமாகவரும் கும்பலாய்கூடியே அதிரு

வீஷ்மர்-கவி.

மெய்வரும்ஞானனந்த வெள்ளமாய்விதித்தோனுகி
மூவருமாகியந்த முதலியபவங்களாகி
யாவரும்யாவுமாகி இரசுவாரிரனர்சற்பல
தேவருமாகிநின்ற செங்கண்மால்யெங்கள்கோவே.

வீஷ்மர்-வசனம்.

ஓர்ஆனந்தவெள்ளமாகிய விதித்த ஒப்பற்றமுதல் வனுகியும் திருமூர்த்திதேவர்களாகியும் சர்வஅகண்டசொரூபநாகியும் சர்வ ஜீவராசிகளின்முதல்வநாய் யெங்கும்பரிபூரணதயாநிதியாய் வியாபித்திருக்கும் ஆதிமூலக்கடவுளாகிய ஸ்ரீமன்நாருயணமூர்த்திபொற் பாத கமலங்களுக்குஅடியேன் அனேகவந்தனம்.

துரியன்-வசனம்.

சருணம்சருணம் யெனதுதாத்தாவே அடியேன் துரியோதன மகாராஜன்வந்தனம் வந்தனம்சுவாமி.

வீஷ்மர்-வசனம்.

அகோவாருமப்பா துரியபூபதியே நீவந்தகேதயாமில்சுகம்பெ ரக்கடவதுயெழுந்திரும் நம்மைவந்துபணிந்த சங்கதிதெரியச்சொல் லுமப்பா துரியோதனு.

துரியன் - தரு.

சந்தனுவன்மைந்தனென வந்தயெந்தன் தாதா
சண்டையில்ஜவர்ஜெயம் கண்டெந்தன் தாதா சரு

சம்பரமேதுகர்ணநில்லா வீரமேதுசண்டையிலே
தீரமேதுஜெயம்நமக்கு வாரதேதுனுந்துவந்தேன்

பீஷ்மர் - தரு.

தங்கமுடிதிங்கள்குலதங்கமேநீவாடா தங்கமேநீவாடா
சொல்லவந்தாய்நல்லவார்த்தை புல்லவனேயீடா
சொந்தமானகவஷத்தை இந்திரன் தனக்குகர்ணன்
தந்தபோதேஅவன்வீரம் குந்தகப்படுத்துமப்பா தங்க

துரியன் - தரு.

பஞ்சவர்கள்மிஞ்சிடவே சஞ்சலங்கொண்டேனே
பாரதத்தில்கர்ணநில்லா நேரதுகண்டேனே
பத்தியாகநம்முடனே ஒத்துக்கூடவந்திடவே
வெற்றியாய்யோஜனைசெய்து உற்றதைசொல்லவந்தேன் பஞ்

வீஷ்மர் - தரு.

வல்லவனேவெல்லும்வகை சொல்லவந்தாபாலா
மன்னவனேதீரத்திலே கர்ணனென்னமேலா
வாடினுனிருக்கவும் நாடிவில்லெடுக்கேனென்று
தேடியேபுரிகிதப்பி கூடவரச்சொன்னதென்னுவல்ல

துரியன் - கவி.

சண்டைக்குப்போவோமென்று தழுவினேன்கர்ணன் தன்னை
கண்டித்துவொன்றுசொன்னுன் காவியாய்காட்டில்தாங்கள்
அண்டியேபுல்லைக்கெளவ அதற்குதேவருவேனென்று
கொண்டுமேயின்பம்சொல்லி குறித்ததைநடத்துவீரே.

துரியன் - வசனம்.

கேளும் தாத்தாவே கர்ணன்யில்லாமல் மனம்வாடியென்னுடன்கூடி சண்டைக்குவாவென்று தழுவினேன் நானிட்ட சபதம் தப்பி நடக்கமாட்டேன்யென்றும் அப்படிநான் வரவேண்டுமென்ருல் உனது பாட்டன் கோவைப்போலே கைகால்களைமடக்கி தவழ்ந்து வாயினுல் புல்லைக்கவ்வினல் சண்டைக்குத்தான் ருவதாக

சொல்லி அனுப்பவந்தேன் தாங்கள் அவ்விதம் நடத்தி யென்னை ரக்ஷிக்கவேணும் தாத்தாவே.

வீஷ்மர்-தரு.

என்னவார்த்தைசொன்னாய்மூடா யிது
ஏர்க்குமோயெவர்க்கும் போடா
யின்னஜாதியென்று அரியாதகர்ண்னனை
சின்னமரியாமல் சீர்தூக்கிப்பேசாதே என

துரியன்-தரு.

தளமெல்லாம்அதமாகிப் போகுதேமெத்த
தாங்காமலேமனம் நோகுதே
வளமானகர்ணனும் வந்தாலேஜெயமுண்டு
உளமெத்தவாடாமல் ஒவ்வி அருகைக்கவ்வும் தள

வீஷ்மர்-தரு.

ரதிகணமகனேவந்துவெல்லுவான் நப்பா
நல்லதப்படிவார்த்தை சொல்லுவான்
அதிகமாய்பேசாதே அவனை பெரிதாயிங்கே
இதுகாலமவனாலே யேதேதுநலம்பெற்றாய் ரதி

துரியன்-தரு.

அங்குபூபன்போனதே யெனக்
கதிகமாய்வந்ததே வாதை
துங்கப்பிரப்பும்வில்லும் சொல்லும்நாகபாஷமும்
செங்கைவீரியமுண்டு ஜெயிக்கலாமைவரை அங்

வீஷ்மர்-கவி.

வீரியதுரியாகேளும் வெகுவிதகர்ணன் தன்னை
அரிவேநானவனுரைத்த அவ்வண்ணம்நடத்துமென்றும்
பரிவுபேசாதேநாளைப் பகல்முழுதும்போகட்டும்
வரிசிலையெடுக்ககர்ணன் மனம்போலேநடத்துவேனே.

வீஷ்மர்-வசனம்.

கேளும் துரியோதனா அந்தகர்ணன்சவுரியமும் சாமார்த்தியமும் நானென அரியாதவனா அவன்யிந்த உலகுக்கெல்லாம் பெரியவன் தான் அவன்சொன்னபடி நடத்துமென்று யென்பேரில்வாதைப்படவேண்டாம் நாளை பகல் முப்பதுநாழிகையும் சென்றவுடனே உன்னுடைய மனதின்படி அந்தகர்ணபூபன் சண்டைக்குவரும்படி செய்குரேன் சந்தோஷமாக யிரும்துரியோதனா.

துரியன்-வசனம்.

ஆனல் அப்படியே நல்லதய்யா யென்தாதாவாகிய பீஷ்மாச்சாரியரே.

பொது-வசனம்.

இவ்விதமாக ஒன்பதாநாள் சென்று பத்தாநாள்சண்டையை நடத்தும்பொருட்டு வீஷ்மர் யுத்தகளம்நாடி நடப்பது.

வீஷ்மர்-தரு.

தளபதிமதிமந்திரிமாரே — யின்று
சமர்செய்யரணகளம் — வருகுவீர்நீரே
வளமானசாரதிதேரும் — யிப்போ
மலேக்சித்திரதங்கொண்டு — யீந்துமேவாரும்
அணிதலேபடைவர்களேகேளும் — வெகு
ஆனேசேனேகளெல்லாம் — நடத்தியேவாரும்
துணிகொண்டவீரறேபாரும் — யிந்த
தொல்லுலகதிரவேகுருக்ஷேத்ரம் — சேரும்
மகுடத்துரைகளெல்லாமீறி — நீங்கள்
வாருங்கள்அவரவர் — வாகனமேரி
சடுக்கெனகிரிச்சிட்டுஒட — யிப்போ
சமர்க்களம்போகவே — பேரிகைபோட
பத்தாநாள்சண்டையைப்பாரும் — யிந்த
பகிரண்டஅண்டமும் — யிடிந்திடனேரும்
வத்தாதகடலெல்லாம்வத்தும் — யின்று
மட்டில்லாநாய்நரி — பரவைகள்பத்தும் தள

பொது-வசனம்.

இப்படியாக வீஷ்மாச்சாரியர் உத்தம்செய்யும்படியாக ஆரம்பித்திருக்க வீஷ்மரைக் காணும்படி தாயாரான கங்காபவானி வருகிற விதங்காண்க.

கங்காபவானிவருகிற-கவி.

பஞ்சவருடன்பகைத்து பத்தானுள்சமர்களத்தில்
சஞ்சலமிருத்துமைந்தன் சயித்திடும்விதமறிந்து
கொஞ்சியேமுகமிலங்க குறைவில்லாப்பணிகள்பூண்டு
செஞ்சிலம்பசையக்கங்கா தேவியும்வருகின்றுளே.



கங்காதேவி-வருகிர-தரு.

கெங்காபவனிவந்தாள் நல்ல
கண்மணிபெருகொளி வண்முருமயிலென கெங்
கெங்காபவனிவந்தாள் யெங்கும்பரிபூரணி சுரு

கந்தனை தந்தவள் செந்திருயிவளென
சந்தனன் தன்னிட மைந்தனைகாண கெங்கா

நத்துமுத்துஜிமிக்கை நாகஒட்டியாணமின்ன
சுத்தச்சரிகைசேலை சோதிப்பளபளென்ன சுரு

சுடரொளிபரவிய யிடையொளிநவமணி
அதாமுமழகிய வடிவுள்ளுபி கெங்கா

ஆதிசிவன்சடையில் ஆடும்பாதஆய்யாரி
சோதிமதிமுகமும் சொர்ணப்பணிசிங்காரி சுரு

சோபிதசுந்தரி பாவவிமோசனி
தீபதக்கண்மணி காபகமாக கெங்கா

சிருமணி தண்டைகள் சிலம்புகலகலென்ன
குருமணிகச்சைகள் கொங்கைதளதளென்ன சுரு

கொஞ்சியகிளிமொழி ரஞ்சிதமிகுதிய
அஞ்சனைவேல்விழி மிஞ்சியரூபி கெங்கா

பொது-வசனம்.

இப்படியாகவந்து காக்ஷிதந்த தாயாரைக்கண்டு வீஷ்மர்பணிந்து சொல்லுகிர விதங்காண்க.

வீஷ்மர்-கவி.

எனக்குமுன்வந்துதித்த யெழுவரைப்போல்கொல்லாமல்
கார்க்கவேயென்னையளித்து கடைதேரஅன்புகூர்ந்து
வனக்கிளிமொழியேயெந்தன் மாதாவேபாதம்போற்றி
தனக்குள்ளேமகிழ்ந்துவந்த சங்கதிதெரிவிப்பாயே.

வீஷ்மர்-வசனம்.

எனக்குமுன்னமேதாங்கள் யேழுபுத்திரர்களைப்பெற்று உடனேகொன்றுவிட்டதுபோலே யென்னைக்கொல்லாமல் அன்புபாராட்டிரக்ஷித்து வளர்த்தெடுத்தயெனது மாதாவேஉன்னுடையபாதாரவிந்தகமலங்களுக்கு அடியேன்வந்தனமம்மாள்தாயே.

கெங்காதேவி-சீசபத்தியம்.

மதிகுலந்தன்னிலே வேந்தருள்தந்தைக்கு
வஞ்சியாள்பாரியாய் வந்துமேகூடி
ரதிமதன்போலவே நாங்களும்மனமொத்து
நாடாண்டுசுகபோக வின்பமுமிஞ்சி
அதிரூபமாகவே தந்துமேயெழுவரை
அண்ணைில்வைகையில் யெறிந்துவிட்டனனே
கதிர்மேனிரூபமாய் உந்தனையருளிய
கடைத்தேரசெய்துநான் கண்களித்தேனே சுரு

எதிரில்லாசண்டைக்கு யின்றுபோக
சதிசெய்துக்கொல்லுவார் தருமவேந்தர்
அதிசேதிகண்டுமே அழகுமைந்தா
ததிகாலமுந்தனைத் தடுக்கவந்தேன்

கெங்காதேவி-வசனம்.

அப்பாகுமாரகாயென்னுலேவந்த யேழுமைந்தரைக்கொன்றுயெட்டாவதுஉன்னைப்பெற்று ரக்ஷித்துமனங்களித்தேன்யின்று நீசண்டைக்குப்போனதே யாமாகில்உனக்குமரணம் நேரும்போகவேண்டாமப்பா குமாரகா.

வீஷ்மர்-தரு.

இந்தனுளுந்தநர விந்தபாதங்காண
என்னுதபசுசெய்தனே அம்மம்மா தாயே
என்னுதபசுசெய்தனே
கந்தநாதனைத்தந்த கருணைகரிஅகோரி சுரு

கமலகரத்திரு — விமலிசிவசங்கரி
நிமலியனைவரு — அமலிவருள்செய்ய இந்த

கங்காதேவி-தரு.

கங்கவதனமணிதனையா — யென்வசனத்தை
சதமாயுருதிகொள்வாய் — யென்மகனேபாலா
சதமாய்யுருதிகொள்வாய்
துங்கவதனுயின்று — செல்லும்சமர்க்களத்தில் சுரு
துடிக்கவுந்தனை — மடிக்கவருமென்று
நடக்கையறிந்துன்னை — தடுக்கவந்தனே கங்க

வீஷ்மர்-தரு.

பக்ஷமுடனேசேனு — பதிபட்டம்யான்பெற்று
பத்துக்கொண்பதுநாளாய் — அம்மம்மா தாயே
பத்துக்கொண்பதுநாளாய்
யிஷ்ட்டமுடனேசண்டை — யிட்டுவந்திடும்போது சுரு
இரவிவருமென்று — பரவிசெய்திட
குரைவுதரும்வுயிர் — பெருவதழகல்ல பக்ஷமு

கங்காதேவி-தரு.

சற்றுமஞ்சாமலே — பெத்தயேழுமைந்தரை மகனே
ஜலத்தில்மிதித்துகொன்றனே
ஜலத்தில்மிதித்துக்கொன்றனே
உத்தமாஉன்னைநானும் — பெத்துவளர்த்தகாலம் சுரு
ஓதுமென்னிடபிதா — யிடம்தந்து
மாதாதுணிந்துமே — அப்போதுமகிழ்ந்தனே சற்று

வீஷ்மர்-கொச்சகம்.

பச்சைமுகன்செஞ்சடையில் பரிந்துலவுமென்தாயே
நச்சரவம்சீர்கொடியோன் நல்லருணம்நான்பொசித்து
வஞ்சமில்லாப்பஞ்சவர்மேல் மண்டிசண்டைசெய்துவர
கொஞ்சமிதுநீதடுக்க கூசாவிடைதருவாய்.

வீஷ்மர்-வசனம்.

பஞ்சமுகத்தையுடைத்தோனுகிய பரமசிவனுடையசெஞ்சடா பாரத்தில் விளங்கியயென்தாயே நான் அரவக்கொடிதிரியனுடைய

உப்புருணங்களையிதுகாலமாய் பொசித்துசேனுபதிபட்டமும் பெற்றுயின்றுடன் பத்துதினமாய் பாண்டவாளின்பேரில் சண்டை செய்துவருப்போது நீயின்றுவந்துதடைசெய்வது யாவருக்கும்யே ளிதமாகும் யிதையோசித்துவிடைதந்தனுப்பும் யெனதுமாதாவே.

கங்கை-தரு.

கேளடாயெந்தன்மகனேநான் சொல்புத்தியை
கேளடாயெந்தன்மகனே
காளடாநீமெத்த களித்துவாடவும்பொல்லா
நமனும்வந்தணுகவே அமையுங்காலமென்றெண்ணி கே

வீஷ்மர்- தரு.

வாதனைப்படவும்நீதியோ பெத்தமாதாவே
வாதனைப்படவும்நீதியோ
யாதவன்திசைமாரி அருங்கடல்வத்திஞலும்
ஆகாசண்டைக்குஅஞ்சி போகாதிருப்பதுண்டோ வாத

கங்கை-தரு.

சீலனேயென்னசெய்குவேன் அப்பனேபாலா
சீலனேயென்னசெய்குவேன்
காலன்வந்தடுப்பதை கண்டுவாடவுங்கேட்டு
கண்ணேசண்டைக்குப்போக யெண்ணங்கொண்டதென்னடா

வீஷ்மர்-தரு.

வாடாதேயெந்தனம்மணி மனம்வரிந்தி
வாடாதேயெந்தனம்மணி
தேடாதஅபகீர்த்தி தேடிக்கொண்டுலகத்தில்
ஜீவன்பெத்திருப்பதும் யாவர்க்கும்யெளிதாகும் வா

கெங்கை-கொச்சகம்.

காமன்கணைக்கடந்து கதித்தமுடிசெங்கோலெரித்து
வாமன்தயவாலே வாழ்ந்திருக்கக்கண்களித்தேன்
நேமமதுபுரிந்துநீயு மின்றுபோற்களத்தில்
ஏமன்துடரயென்சொல் யேர்க்கரேதாகண்மணியே.

கெங்கை-வசனம்.

ஐயையோகுமாரகா மன்மதராஜனுடைய பஞ்சபானத்திர்க்கு உட்படாமலும் யிராஜ வரிசைசெங்கோல் மணிமுடியும்வெறுத்து

வாமதேவன் தயவினலே பிர்மாச்சாரியாக வாழ்ந்து வரசந்தோஷி த்தேன் யின்றுரணக்களத்தில் மடியநேரிட்டது உன் விதிவசத்தி னல் யென்வார்த்தையுனக்கு யேர்க்காதவண்ணமோ யென்னசெ ய்குவேண்டாகுமாரகா.

வீஷ்மர்-தரு.

இன்னம்யென்னசெய்வேநம்மணி அன்னையேவுந்தனுக்கு
இன்னம்யென்னசெய்வேநம்மணி
பன்னும்சேனுபதிபட்டம் பத்துநாளாய்பெற்றுகொண்டு
பாதிசண்டைசெய்துநானும் நீதியோயொளித்திருக்க சுரு
பக்ஷம்வைத்துநீ னேசமிஞ்சியே
பேசவும்மனம் கூசுதம்மணி இன்ன

கெங்கை-தரு.

அப்பர்மைந்தாயென்னுசெய்குவேன் சுந்திரமுள்ள
அப்பாமைந்தாயென்னுசெய்குவேன்
எப்போவுன்னைகாண்பேன்பாலா யிந்தநாளிலுந்தனுக்கு
இட்டுசண்டைசெய்துமேலாய் பட்டுவிழக்கலாந்தானே சுரு
யேதுமில்லா மாதுசொல்லை
பேதம்செய்து ஒதலாமோ அப்

வீஷ்மர்-தரு.

இட்டவிதிதப்பிப்போகுமோ அவரவர்க்கு
இட்டவிதிதப்பிப்போகுமோ
எட்டுதிக்கையாண்டாலென்ன எந்தனுளிருந்தாலென்ன
இன்பசுகமொன்றுமில்லை துன்பமிகவானத்தொல்லை சுரு
யேகிசண்டை யாகியின்று
சாகஅஞ்சி நோகலாமோ இட்ட

கெங்கை-தரு.

பெத்தவயர்பத்துதை யப்போமகனேஉன்னை
பெத்தவயர்பத்துதை யப்போ
மெத்தமெத்தகீர்த்தியெங்கும் பெற்றுயேரத்தினமே
மிஞ்சிநீயும்பேசலாமோ சஞ்சலம்வருமேபாலா சுரு
வீரமற்று நேருங்கதி
சேரவந்து நேர்ந்ததுவோ பெற்ற

வீஷ்மர்-கந்தார்த்தம்.

தந்தைதாய்சதமுமில்லை தனக்கிடம்சதமுமில்லை
புத்தியில்மகிழப்பெற்ற பொருளெலாம்சதமுமில்லை
ஐந்துரயென்முன்வந்த அம்மணிவொன்றுகேளும்
பைந்திருமேனிமாயன்.

வீஷ்மர்-தரு.

பதமிதுசதமே நம்பினேனம்மா
பதுமிதுசதமே
பதமிதுசதமென்று மகிழ்வுகொண்டேனீயும்
யெதைச்சொன்னபோதிலும் யென்செவிக்கேற்குமா பத

கங்கை-கந்தார்த்தம்.

வசுதேவர்நீங்களந்த வதிஷ்டர்தன்சாபத்தாலே
சிசுவாகயென்கெர்ப்பத்தில் ஜெக்கியேயெழுவர்மாண்டார்
விசுவாசமாகவுன்னை வெகுகாலமிருக்கச்சாபம்
பிசகாது மகனேவுன்னை.

கெங்கை-தரு.

பிரியவிட்டேனே உன்மேல்வைத்த
பிரியம்விட்டேனே
பிரியமாகயேகிநீயும் போருக்கிடம்செய்து
நெரியதுசெலுத்தியே நீதேவநாகவே பிரி

கெங்கை-வசனம்.

வாரும்வாரும் குமாரகா அஷ்ட்டவசுக்களான நீங்கள்யெட்டு பேரும்காமதேனுவை திருவடிவதிஷ்டராலே சிசுவாகயென்கெர்ப்பத்தில் வந்துதித்தீர் யிப்பொழுது சாபந்தவராமல் யேழுபேரும் பிரந்தவுடனே போய்விட்டார்கள் நீயெட்டாவது பிரந்துசிலகாலம் பூமியிலிருந்து காலங்கழித்து வரும்படி நேரிட்ட சாபமானது உனக்கு விமோசனகாலமான படியினலே யென்சொல்லை கூடத்தள்ளி சண்டைக்குபோகுறாய் உனது நெரியைச் செலுத்தி வாருமப்பா குமாரகா.

பொது-வசனம்.

இவ்விதமாக வீஷ்மருக்குதாயாகிய கெங்காபவானிவிடைகொடுக்க வீஷ்மாச்சாரி குருக்ஷேத்திரம் நாடிவருகும்போது! தருமராஜன் கொலுவுக்கு வருவதுகாண்க.

தருமராஜன்வருகிர. தரு.

ஒன்பதாம்நாள்வரைக்கும் யுத்தமும்செய்துவெற்றி
இன்பமாய் தம்பிமார்கள் யிருபுரம்சேனைசூழ
அன்பாகவிருதணிந்து அடிமுடிபணிகள்மின்ன
தெம்பாகதருமவேந்தன் ஜெயவீரர்வருகின்றாரே.



தருமர்வருகிர-தரு.

அதிவிதசுந்தர — அரசர்க்கரசனை
அருமைப்பஞ்சவர்கள்வந்தார் — குருக்ஷேத்ரம்நாடி அதி
கதிரொளிமணிமுடி — கனகபூஷணமின்ன சுரு
கடிகிமுரசக்கொடி — முடிகிஅளாவிட
நெடுமுடியரசரும் — அடியிலுலாவிட அதி
நீண்டவாளும்கடகம் — நெடியத்தனுதண்டங்கள்
பூண்டவிருதுடனே — பொங்கும்கடலெனவே சுரு
பூரணகரிபரி — தேரணிபடைகளும்
யேரணியாகவே — சாரணருடனே அதி
வீரமுரசுபேரி — வெத்திசின்னமும்பூரி
ஆரபாரத்துடனே — அதிரஅண்டங்களெல்லாம் சுரு
அதிரதர்சமரதர் — எதிரில்லாமகரதர்
உதிரவேகிரணமும் — பதரியேசூழ அதி

தாவுமிதுபத்தாநாள் சண்டைசண்டையென்றுமே
மேவும்வீஷ்மர்வீரம் விள்ளுமென்றேயுரைத்து சரு

வுதவிதமாகிய ரதமதிலேரியே
மதிமுகசூரியவன் யெதிரில்லாமகரதர் அதி

கிருஷ்ணமூர்த்தி-கவி.

தேவகிசுதனைவந்து சிரந்தறேப்பல்லேசேர்ந்து
ஆவலாயசோதைமாது அருமையாய்வளர்ந்ததேவன்
கேவலமாதர்க்கன் குலவியேரதத்திலேரி
மாவலர்கிருஷ்ணதேவர் மகிக்ஷியாய்வருகின்றாரே.



கிருஷ்ணமூர்த்திவருகிர-தரு.

பச்சைவண்ணமுடைய பார்த்தசாரதியான
பகுத்தரக்ஷகனை ஜெகமெங்கும்வணங்கிட
பகுத்தரக்ஷகனை
இச்சையாஜவரை யிதுகாலமாயடுத்தேன்
எவருமரியநன்றாய் கவரவாளைக்கெடுத்தேன்
இந்திரன்திரநன்பாய் தந்தலையாரன் சரு

யின்பம்வைத்தவனிட சிந்தையும்தேர
சந்திரமாய்ஜெயம் விந்தையும்கூர பச்சை

பட்டுதராவுங்குச்சி கட்டும்கலையிலங்க
பதக்கம்தளதளென்னவே மிகவச்சிரப்பதக்கங்கள்
உதிக்கும்சூரியனென்னவே

மட்டுமிதமில்லாத மன்னரெல்லாமடிய
வந்திடசண்டையெந்தன் சிந்தையில்கொண்டேன்மிக்க சுரு

அந்தரபூமியு மெந்தனுக்கஞ்ச
சுந்திரமாய்கெடி தந்திடமிஞ்ச பச்சை

வல்வத்துரியனென்ற சொல்லையழித்திடவே
மனதிலின்பத்தையடுத்தேன் வெகுதந்திரவித்தை
நினைத்தவிதத்தைமுடித்தேன்

நல்லபஞ்சவர்களை ரக்ஷித்திடவேயின்பம்
நாட்டியேவந்தேன்மிக்க மேட்டிமைத்தந்தேன்நல்ல சுரு

கூட்டமாய்துரியவன் வாட்டமுங்கொள்ள
பாட்டனுமடிபடும் நாட்டமுங்கொள்ள பச்சை

துங்கக்கோலியநகர் யெங்கும்புகழும்சாலை
சொல்லும்வன்னியகுலேசன் நல்லருத்திரகோத்திர
வல்லரங்கையநேசன்

நல்லகிருஷ்ணசாமியும் நாடியேபத்தாநாள்சண்டை
வண்மையையுணர்ந்தோன் மிக்கவுண்மையைக்காண சுரு

நல்லயிம்மையும்மறுமையும் செம்மையாய்பெற்றிட
அம்மன்பூரண நன்மையேவந்திட பச்சை

பொது-வசனம்.

இவ்விதமாகவந்த ஸ்ரீகிருஷ்ணபாகவானை பஞ்சபாண்டவர்கள் கண்டுதுதிசெய்கிரவிதங்காண்க.

தருமர்-தரு

வேதசோதியே-சுவாமி ஆதிமூலமே
விண்ணவர்க்கரசே மேகவண்ணனே
யேகநாயகா மெய்யடிசருணம்
அண்டரெண்டமும் உண்டவாயனே ஆதிமாயனே
அலைகடலில்பள்ளிகொண்டவா அடியினைசருணம்
தவளசங்கனேசக்ரபாணியே சதுர்மளாப்பொருளே
தாமோதரனேவாமதேவனே சருணம்சருணமே

கண்ணுக்குஇமைபோல்யெங்களை காக்கும்கர்த்தனே
கரியகோபாலா-அரி-அரி-அரி கழலேவந்தனம் வே

தருமர்-கவி.

அரனெரிநீதியுள்ள அழகியபாட்டனின்று
திரமிகுசமர்க்களத்தில் சிகண்டிவந்தெதிர்த்தாலப்போ
பரகெதியடைவேனென்ற பத்தாநாள்வந்ததிப்போ
நரவணிதேவாசண்டை நடத்தவேயரிவிப்பீறே.

தருமர்-வசனம்.

கேளுங்கருணைக்கடலாகிய கர்த்தனேயெங்கள் பாட்டனான வர் சிகண்டியையென்முன்னே வந்துயெதிர்க்கச்செய்தால் அவர் வில்லெடுக்காமல்பரகெதியடைவேனென்றுநமக்கு உறுதிசொல்லிய பத்தாநாள் யின்றுச்சுதேயின்றையயுத்தமானது யெப்படிநடக்கு மோஅதை யெங்களுக்குதெரியச்சொல்ல வேணும்பகவானே.

கிருஷ்ணமூர்த்தி-தரு.

தங்கமேதருமா தாழ்வொன்றும்வருமா
தயங்காதேமயங்காதே குணசீலா சுரு

தடுத்துவீஷ்மரும் திகைத்துவீழவே
மருத்திவத்துடன் வகுத்துகாணலாம் தங்க

தருமர்-தரு.

குருபெரியோரும் வருமுறைபாரும்
கொல்லாமலவர்களை விடலாமோ சுரு

கொஞ்சமும்வர்மங்கள் நெஞ்சங்கொண்டோமினி
சஞ்சலமிஞ்சியே அஞ்சவும்வேண்டாம் தங்க

கிருஷ்ணமூர்த்தி-தரு.

பாட்டனைமடிக்க பலவரும்துடிக்க
பாவிநாங்களும் வந்துதித்தோமே சுரு

பாரையாளவே வீரமோயிது
நேறவேவிதி யாறைநோகுவேன் தங்க

தருமர்-தரு.

மறைகுலத்தோறை வம்மிஷத்தாறை
மடிக்கப்பிறந்தபாவி நானேபா சுரு

வாசவானுநில தேசமுமாளவே
பாசமுமிஞ்சியே மோசமுண்டாச்சே பாட்ட

கிருஷ்ணமூர்த்தி-கவி.

இரப்பதைஅரிந்தமன்ன யிரும்புடன்கூடிக்கொண்ட
நெருப்பையும்பக்ஷம்வைத்து நீக்கியேயடிப்பாருண்டோ
விருப்பம்வைத்துங்கள்மீதில் வெகுண்டுவந்தவரைக்கொல்ல
பொருப்புவைத்துறைக்கவேண்டாம் போர்செய்யத்துணியலாமே.

கிருஷ்ணமூர்த்தி-வசனம்.

பெரியவாளென்னும் தண்மையை பூரணமாகத்தெரிந்த தர்ம பூபதியே கேளும் இரும்போடுகூடிய நெருப்பின்மீது பக்ஷம்வைத்து நெருப்பைநீக்கி யிரும்பைஅடிக்கக் கூடுமோ அதுபோல் நமக்கு சத்துருவானவரை யெப்படிகொல்லாமல் விடுவது அந்த பக்ஷங்களை விட்டு சண்டைக்குத்தகுந்த முஸ்த்தீப்புசெய்யும் தருமநந்தனா.

பொது-வசனம்.

இவ்விதமாக கிருஷ்ணமூர்த்தியும் பாண்டவர்களும் வீஷ்மாச்சாரியின்பேரில் உயித்தியம்செய்வதற்கு யோசித்திருக்கையில் துஷ்ட்டத்தூய்மன் வருகிற விதங்காண்க.

துஷ்ட்டத்தூய்மன்-வருகிற-கவி.

துருபதன்யாகந்தன்னில் துரோபதையுடன்பிறந்த
உருபதவதனதீரன் ஒளிமுடிபணிகள்மின்ன
இருபதம்வீரகண்டா யிசையவேவிருதுபூண்டு
பொருபததுஷ்ட்டத்தூய்மன் பூபதிவருகின்றானே.



துஷ்ட்டத்தூய்மன்-வருகிரதரு.

சுத்தவீரியசேனைக்கதிபதியும் பாஞ்சாலதேச
துஷ்டத்தூய்மனும் வந்துமேவினேனே
சத்தபேரிகைடமரங்குமிரிடவே மணிமுரசடித்திட
தனிரதத்தில்யேரி வந்தனனே
மகிடதுரைகளும்வந்துநெருங்கிடவே காலாளும்தேர்களும்
வரிசையாய்கரிபரிகள் நடத்திடவே
சகடவோசைகள்அண்டமொடுங்கிட பெரும்படைகள்நடந்திட
தாவுமெதிரிகள் மனதுதேங்கிடவே
குண்டலத்திலேதேவரஞ்சிடவே வெகுமச்சக்கொச்சலர்
குகுதப்பபப்பலர் கூட்டமிஞ்சிடவே
முண்டகத்திலெழுந்தபுங்கவனும் வகுத்ததென்ன
மோசமென்றுமோ பேசதுங்கவனும்
சந்திரகுலத்தமர்களித்திடவே தேவர்களெல்லாம்
தாண்டியுலகத்தை ஓடிஒளித்திடவே
விந்தைபஞ்சவர்சேனைக்கதிபதியாம் கண்டவரெல்லாம்
விளங்கவேயிவன் கூறும்பசுபதியாம்-சுத்த

துஷ்ட்டத்தூய்மன்-வசனம்.

சருணம்சருணம் பூலோகதயாபரா புண்ணிய தருமபூபதியே உம்முடைய பாதாரவிந்த கமலங்களுக்கு அடியேன் வந்தனம் வந்தனம்.

தருமர்-கவி

என்குரையெல்லாம்போக்கி யீடேரிக்களிக்கநாங்கள்
மங்களமாகவந்த மைத்துனசுகித்துவாழி
பொங்கமாய்தூரியன்முன்னே போர்செய்யநமதுசேனை
தங்கமேஅணிவகுத்து சமர்செய்யத்துணிகுவீரே.

தருமர்-வசனம்.

எங்கள் துயரத்தைமாற்றி நாங்கள் யீடேரும்படி ஜெயந்தரவந்தமைத்துன நீர் யிப்போது சேனைகளை அணிவகுத்து யுத்தத்திர்க்கு ஆரம்பம்செய்யும் மைத்துன.

துஷ்ட்டத்தூய்மன்-வசனம்.

இதோ தாங்கள் சொல்லியபடியே யெனது சேனைகளை களையூகம்வகுத்து தூசியணியிலே யிருக்கக்கண்டவரை நான் யெதிர்த்து

வந்தேன் ஓய் வீஷ்மாச்சாரியே யென்னை எதிர்த்து யுத்தம் செய்ய வாரும் சேனதிபதியே.

வீஷ்மர்-தரு.

முந்தியேசேனபதி தந்தனேனமனுக்கிறை
முன்னேவந்தெதிர்த்த துஷ்டத்தூய்மனே
யெந்தனையெதிர்த்துவந்தாய் உந்தனைவிடுவதுண்டோ
யிப்பவேவருவான்கிட்டி யேமனே சுரு

எல்லையல்லா வஞ்சவனே
கொல்லவந்தேன் வில்லெடுத்து முந்தி

துஷ்டத்தூய்மன்-தரு.

வில்லெடுத்துக்கொல்லவந்த வீஷ்மனேயுந்தனைமீறி
வெட்டியேயெரியசரம் பூட்டினேன்
நல்லதுநல்லதுவுன்னை சொல்லுமுன்னேகொல்லவேண்டி
நானிலம்நடுங்கவீரம் காட்டினேன் சுரு

ரத்தவெல்லம் மெத்தமெத்த
யுத்தகளம் பெற்றிடவே வில்லெ

வீஷ்மர்-தரு.

விட்டதொருபாணத்தாலே யெட்டுதிக்குயானைகளும்
வீரிட்டுவீரிட்டுகண்கள் மூடவே
திட்டமாகவந்தெதிர்த்த முட்டவுந்தன்சேனையெல்லாம்
நரிக்கிநரிக்கித்துண்ட மாக்கினேன்
வாட்டவேவுந்தனையிதோ பூட்டினேன்சரங்கள்கோடி
மட்டிலாகொடிவிருதை போக்கினேன் சுரு

வந்தெதிர்த்து யெந்தனைநீ
ஞெந்திடவே முந்திடவே விட்ட

வீஷ்மர்-கவி.

சூரியனும்சந்திரனும் திசைகெட்டோட
சுழலநக்ஷத்திரமெல்லாம் உதிர்ந்துவாடி
பாரியமாமலைகளெல்லாம் குலிங்கியாட
பாதாளஷேஷன் முடிமுதுகுகோண
மாரிமழைதாறையென்ன பாணம்நீட்டி
வல்லவனுடன்தேர்பரியும் கொடிகளெல்லாம்
வீரியனே துண்டதுண்ட மாகவெட்டி

வெல்லுவேன்வுந்தனைநான் கொல்லுவேனே.

வீஷ்மர்-வசனம்.

சந்திரசூரியாள் திசைதப்பியோடவும் கரகரவென்றுசுழன்று வீஷ்மர்விடும் பாணங்களினால் நக்ஷத்திரங்களெல்லாம் உதிரவும் அஷ்ட்டகுலபர்வதங்கள் குலிங்கியாடவும் ஆதிசேஷன்முதுகுகோணவும் மேகத்தாரையைபோலும்பாணங்களை மீட்டிதேர்பரிகொடி முதலானதையும் துண்டந்துண்டமாகவெட்டி உன்னைக்கொல்லவந்தேன்பாரும் துஷ்ட்டத்தூய்மனே.

துஷ்ட்டத்தூய்மன்-தரு.

இந்தச்சவுரியம்பேசிய வீஷ்மாச்சாரியேநான்மீரி
இணையில்லாதசரம்கோடிகோடியாக யெடுத்தேனேபாராய்

வீஷ்மர்-தரு.

பாரடாதுஷ்டத்தூய்மனே நானிதோபாணமெடுத்தேனே
பஞ்சுபஞ்சாகவேபரந்துவோடவே பார்வுன்னையடித்தேனே

துஷ்ட்டத்தூய்மன்-தரு.

அடுத்தவீரியம்கண்டுமேகோபமாய் அஸ்த்திரமெடுத்தேனே
அந்தசூரியன்கிரணம்வருகுது அஞ்சியேவோடாதே

வீஷ்மர்-தரு.

ஓடவேபடைகளை அதமதுசெய்யவே ஒருசரமெடுத்தேனே
ஓடுங்கவுன்னிடசாரதிபரிகளை தலையையறுத்தேனே

துஷ்ட்டத்தூய்மன்-கந்தார்த்தம்.

சாரதிபரிகள்விழ சற்றெனும்பயமில்லாமல்
வேரொருரதத்திலேரி வெகுண்டுமேவில்லைவாங்கி
பாரெலாம்நடுநடுங்க பலவிதபாணம்மீட்டி
தாருமாராகச்சேனை.

துஷ்ட்டத்தூய்மன்-தரு.

தந்தளித்துவோடஅடித்தேன் மலைமலையாய்
சுத்திலும்குவியமடித்தேன்

மெத்தமெத்ததுள்ளிவந்த வீரியமொடிங்கிடவே
விட்டேன்சரங்கள்கோலி பட்டுவிழபாணமிதோ தத்

வீஷ்மர்-கந்தார்த்தம்.

அந்தரபூமியெங்கும் அடங்காதவீரமீரி
வந்திடும்பாணமெல்லாம் மடக்கியேபொடியாய்தாக்கி
சந்திரவில்லைவாங்கி சுடரொளிசரங்களேத்தி
மந்திரபலங்கொடுத்து,

வீஷ்மர்-தரு.

மட்டில்லாசரங்கள்விடுத்தேன் அமோகமாக
கொட்டிகொட்டிவீரங் கெடுத்தேன்
வட்டமானவில்லொடித்து சட்டமானதேரழிந்து
வாடியேசேனுபதியும் ஓடவுமடித்தேனிதோ மட்..

கிருஷ்ணமூர்த்தி-கவி.

சஞ்சலமில்லாநல்ல தருமபூபதியேகேளாய்
மிஞ்சியேவீஷ்மாச்சாரி வெகுசேனைக்கதிபன்றன்னை
அஞ்சியேபுறங்கொடுத்து அடித்தெதிர்வரவும்கண்டேன்
என்சொலுக்கிசைந்த வீமசேனனைவரச்செய்வாயே.

கிருஷ்ணமூர்த்தி-வசனம்.

கேளும்தருமபூபனே யின்றையத்தினம் வீஷ்மாச்சாரியானவர் வெருண்டு வெகுசேனைகளையும்மடித்து சேனுதிபதியாகிய துஷ்டத்தூய்மனை புரந்தந்தோடச்செய்து றுத்ராகாரமாகவரக்கண்டேன் சல்தியாக வீமசேன்னைவரச்செய்யும் தருமராஜனே.

வீமன்வருகிர-கவி,

தட்டியேபிகுவெடுத்து தண்டமுங்கரத்திலேந்தி
நெட்டியேநடைநடந்து யிடிமுரசதிரபேரி
கிட்டியேதுரியன்சேனை கிடிதாங்ககெதையுமேந்தி
கொட்டியேவீமசேனன் குதித்தோடிவருகின்றுனே.



வீமன்வருகிர-தரு

மதவீமருஜபதிவந்தேன் சோதி
மணிவரிசைகச்சைகளும் அணிவரிசைபூண்டு
இருபுரத்துமீசையைமுரிக்கி கோடை
யிடிபோலேஆக்ரகித்து கொடிதலம்பெரிகி
வீரமணிவெண்டையங்கள்கொஞ்ச தாண்டி
விண்டலத்துதேவர்களும் கண்டுமனமஞ்ச
நீலமலைபோலுருவங்காட்டி கையில்
நிகரில்லா தண்டமதை தகதகெனஆட்டி மத

வீமன்-கவி.

அரிகரிவாசுதேவா அரவணச்செல்வநாதா
நரிபரியாகச்செய்த நாதன்மைத்துனரேபோற்றி
பரிகரிபடைகள்சூழும் பங்கயக்கண்ணபோற்றி
பிரியம்வைத்தழைத்தசேதி பேஷதநாநரிகிலேனே.

வீமன்-வசனம்.

அரிகரி வாசுதேவா அகண்டபரிபூரண சச்சுதாநந்தா நரியை ப்பரியாக்கின கயிலாசபதிக்கு மைத்துனறே உமது திருவடிகளுக்கு அடியேன் அநேகவந்தனம் யென்னையழைப்பித்தகாரியம் அருள்செய்யவேண்டும் கர்த்தனே.

கிருஷ்ணமூர்த்தி-தரு.

வீமாசமர்செய்யநேமமாகவந்த வீஷ்மனுலேவரும்மோசம்
பூமாநீமிஞ்சியே போர்செய்யாவிட்டாலே
பொடிபடபடையெல்லாம் அடியோடேபோகுமே-வீமா

வீமன்-தரு.

நாதாயெனதுவீரம்பாரும்இப்போ நல்லவிடையனக்குதாரும்
போதாதெனக்கிந்த போர்களைப்படையெல்லாம்
பிடித்துக்கெதையினுலே அடித்துத்தூளாக்குவேன்-நாதா

கிருஷ்ணமூர்த்தி-தரு.

பாருப்பாருய்வீஷ்மாச்சாரியின் பயமற்றுவருகுருன்மீறி
மாறுவீரியங்கொண்டு மடிக்கவுன்னலாமோ
மயங்காதேநீயொன்றும் ஜெயங்கொண்டுவருகுவாய்-பாரு

வீமன்-தரு.

தேவாயென்பாட்டனைகொல்லயெண்ணி செப்புவதழகல்லசுவாமி
மேலாய்வீரியங்கொண்ட விருதுவேந்தரையெல்லாம்
விண்ணிலடையத்தானே கொன்றுவருவேன்பாரீர்-தேவா

கிருஷ்ணமூர்த்தி-வசனம்.

அப்பா வீமசேனா உன்னுடைய மனம்போலே ரணகளம் சென்று யெதிரிகளை ஜெயம்செய்து வாருமப்பா வீமசேனா.

வீமன்-தரு.

கெதைதகையிலெடுத்தேனே படைகளெல்லாம்
அதமதாயடித்தேனே
யெதிர்வரும்சேனைவள் யெங்கும்சிதரியோட சுரு

யெட்டிவந்தனே கிட்டியுங்களை
பட்டுவீழவே தட்டியெரிந்தனே கெதை

பொது-வசனம்.

இப்படியாக வீமசேனன் யெதிர்த்தசேனைகளை யெல்லாம் தும்சம் செய்யும்போது துரியராஜன் வீமனையெதிர்த்து யேதென்று சொல்லுகிரவிதங்காண்க.

துரியன் தரு.

துள்ளாதேமதித்தேதன்வீமாவுன்னை துரியன்வந்தெதிர்த்தேதன்
விள்ளாதுயென்சேதி விடுவேதேதுவுன்னை சுரு

வெல்லவுந்தனை சொல்லுமுன்னமே
கொல்லவேயிதோ வில்லெடுத்தனே துள்

வீமன்-தரு.

தடைபடாமடிப்பேன்முந்திசொன்ன சபதத்தைமுடிப்பேன்
மடையாநாய்பேர்பெத்த மதவீமனுனென்று சுரு

மனதிலச்சம் நினைத்திடாமலே
சினைத்துவந்தயோ களத்தைமாற்றவே தடை

துரியன்-தரு.

வல்லமையேதுயென்னையெதிர்த்து வந்தாயிப்போது
நல்லதுவுந்தனை நான்கொல்லும்பகையாச்சு சுரு

நாடிவந்தயோ தேடியெந்தனை
ஓடிபோகவும் கூடுமோயினி வல்ல

வீமன்-கவி.

குடைமுடி துரியாயென்னை கொஞ்சமாய்நினைக்கவேண்டாம்
தடையில்லாவுன்னைக்கொல்வேன் தரணியிலரசநப்பா
படையதுசெல்லாதென்பார் பந்தியம்பழுதாமென்று
இசையவுமறிந்திடாமல் யெதிர்த்துநீயிருப்பதாமே.

வீமன்-வசனம்.

கேளும்துரியோதனராஜனே உன்னைக் கொல்லயெனக்குஅரிதல்ல உலகத்தில்இராஜர்அகப்பட்டால் படைவெல்லாதென்பார் அதினால்னனிட்டசபதம் நிறைவேருதென்று உன்தம்பிமார்கள் யாவரையும்மடித்து உன்னைக்கொல்லவேணுமென்று யிதுவரையில் உன்னைக்கொல்லாமல் உன்னைஉயிருடன்வைத்திருக்குரேன் அது தெரியாமல்நீயென்னை யெதிர்த்துஅபசெயமடையாமல் ஒடிப்போவாய் துரியோதனை.

துரியன்-தரு.

கொல்லவுந்தனலாகுமோ அடாமடையாயெந்தனை
குதித்துவந்துமே யெதிர்த்துப்பேசாதே

வீமன்-தரு.

எதிர்த்துவந்துனைகுதித்துமடித்துமே அடா துரியாவெரியா
வதைப்பேனுந்தனை தேவரரியவே

துரியன்-தரு.

தேவரரியதீரங்காட்டிய அடாமடையாயெந்தனை
திடத்துப்பிடித்து யெடுத்துவீசுவேன்

வீமன்-தரு.

வீசியெரியவேவெகுண்டுவந்தனே அடா துரியருஜனே
வில்லைமுரித்து கொல்லத்துணிந்தேனே

துரியன்-கந்தார்த்தம்.

கொல்லவும்துணிந்தேனென்று குரிகியேவந்துயென்கை
வில்லையுமுரித்தபோது வேறொருவில்லெடுத்து
சொல்லவும்யேமனென்று சுடரொளிசரங்கள்பூட்டி
சல்லடைக் கண்போலுன்னை.

துரியன்-தரு.

தாக்கவும்சரங்களெடுத்தேன் கோடிகோடியாய்
மாய்க்கவேபெருகவிடுத்தேன்

சொக்கியபடைகளெலாம் சுத்திலும்கவிந்துசாட
நோக்கியேதமையன் தம்பி ஞெந்துமேகவிந்துவாட

வீமன்-கந்தார்த்தம்.

ஏவியசரங்களெல்லாம் யெந்தன்மேல்வந்திடாமல்
தாவியேசரத்தினலே தடுத்துமேவிடுத்துபாணம்
தூவியேகொடிதேர்வில்லும் துரகமும்வல்லன்சாய
ஆவியை அழித்திடாமல்.

வீமன்-தரு.

அட்டகாசம்செய்தேன்பாரடா தமையனென்றும்
இஷ்டம்வைத்தேன்நீயும்நேரடா
நஷ்டமுள்ளவீரியனே யிஷ்டமாயெதிர்த்திடாமல்
கஷ்டமென்றுநீஓடாவிட்டால் அக்ஷணமேகொல்வேனுன்னை

வீமன்-வசனம்.

கேளும் அண்ணு துரியோதின உன்னுடையவிருதுகளெல்லாம் அழிந்து உன்மீதில் காயம்படாமல் மனம்வைத்தேன் யினியென்னுடன் யெதிர்க்காமல் சண்டைக்கு வரவேண்டாம் போதும்போதும் அப்படி நீ யெதிர்த்துவந்தால் உனக்கு பரகெதிதருவேன் பயப்படாமல் போய்வாரும் அண்ணுவே.

பொது-வசனம்.

இவ்விடத்தில் யிப்படியிருக்க கிருஷ்ணமூர்த்தி தருமராஜனைப் பார்த்து சொல்லுகிரவிதங்காண்க.

கிருஷ்ணமூர்த்தி-கவி.

முரசுயர்க்கொடிபடைத்த முதல்வனேபீமன்போக
அரசருக்கரசன்கண்டு அவனெதிர்த்திருக்கும்போது
விறைசெரிமாலேபூண்ட வீஷ்மனைக்கொல்லவேண்டும்
சரசவல்லாசபார்த்தன் தனையிங்கேவரச்செய்வாயே.

கிருஷ்ணமூர்த்தி-வசனம்.

கேளும் முரசகேதனு சமர்செய்யும் வீஷ்மர்பேரில் உத்தம்செய்யும்படி வீமசேனனை அனுப்ப அவன் துரியோதனன்மீது போராட மீரிவரப்பட்ட வீஷ்மனைக்கொல்லவேண்டும் அர்ச்சுனனைவரச் செய்யும் தருமராஜனே.

அர்ச்சுனன்வருகிற-கவி.

இலங்கைருவணனைக்கொன்ற இராமனென்றிருக்கும்வண்ணம்
துலங்கவேபணிகளெல்லாம் சூரியகிரணமென்ன
குலிங்கிடரதத்திலேரி கொண்டல்வண்ணனைத்துதித்து
கலங்கிடதுரியராஜன் காண்டீபன்வருகின்றனே.



அர்ச்சுனன்வருகிற-தரு.

வேதசோதியாய்வந்த ஆதிபகவான்முன்னே
விஜயகாண்டீபன்வந்தான் நல்ல
திசைபதிஉச்சித பசுபதிமெச்சவிஜய கா
காதலாகநிவாத கவசகாலகேயரை சுரு

கண்டுநானரியா தொன்றுமவர்களை
கஷ்ட்டமரவேதேவ ரக்ஷகனென வேத

பரமசிவத்தைவென்று பாசுபதமும்பெற்று
வரம்தரும்சிவகாமி மனதைமகிழவைத்து சுரு

மகூரேகையும் உச்சிதமிகுதிய
வடிவினிலதிவித கெடிபெருந்தீரன் வேத

தவளைசங்கமும்பேரி டமரமுரசுபாட
துவளும்பிடைமாதர்கள் சோங்கிமனதுவாட சுரு

சொல்லியதிருமுகம் வல்லவன்பிருபுரம்
வல்லவன்சூரியன் போலெனவிளங்கியே வேத

காலிலணிந்தவீற கண்டாமணிகள்கொஞ்ச
சிலமணிப்பணிகள் ஜெகச்சோதியாகமிஞ்ச சுரு

திங்கள்குலாதிபர் மங்களமதிபதி
ஸ்ரீதரமாதவன் பாதமேநம்பி தேவ

அர்ச்சுனன்-ஸீசபத்தியம்.

சங்காழிகையனே சாமளசொரூபனே
சதுர்வேதநாதனே சருணமடியேன்.

கிருஷ்ணமூர்த்தி-ஸீசபத்தியம்.

சிங்காரலோலனே தேவப்பிரகாசனே
சிலைவிசயதீரனே யென்றும்வாழி.

அர்ச்சுனன்-ஸீசபத்தியம்.

பொங்காழிவண்ணனே போர்முகந்தன்னிலே
பிரியமாயழைத்ததை அறிகிலேனே.

கிருஷ்ண்மூர்த்தி-ஸீசபத்தியம்.

தங்காமலிதுவேளை காங்கேயன்மிஞ்சியே
சவுரியமடங்கவே செய்யவேண்டும்.

அர்ச்சுனன் ஸீசபத்தியம்.

பங்கயகண்ணனே பக்ஷமானேன்

கிருஷ்ணமூர்த்தி-ஸீசபத்தியம்.

திங்கள்குலதீரனே தேரிலேரும்

அர்ச்சுனன்-ஸீசபத்தியம்.

துங்கமணிரதமீதில் யேரினேனே

கிருஷ்ணமூர்த்தி-ஸீசபத்தியம்.

பொங்கமாய்ரதம்விட்டுப் போகலாமே

பொது-வசனம்.

இப்படியாக வீஷ்மர்பேரில் சண்டைக்குப்போகும்படி அர்ச்சுனன்தேரிலேர பகவான் தேரைநடத்த அர்ச்சுனன்வில்லெடுத்து உயித்தியம் செய்கிரவிதங்காண்க.

அர்ச்சுனன்-தரு.

அண்டரெண்டம்புவிகள்நடுங்க வில்லையெடுத்தேனே
வில்லையெடுத்தேனே

அமர்க்களமெல்லாம்கிரையபாணம் வாங்கிவிடுத்தேனே

வீஷ்மர்-தரு.

விடுத்தசரத்தால் அதமாய்சேனை
விழுந்துமடியவே விழுந்துமடியவே
வெகுண்டுசேனைகள் முரிபட்டோடக்
கணைகள் தொடுத்தேனே

அர்ச்சுனன்-தரு.

கணைகள்தொடுத்திடக் கரிபரிபடைகள்
அடிப்பட்டோடவேமிக அடிபட்டோடவே
காலருத்திரகாரமாகவே கலங்கியடித்தேனே

வீஷ்மர்-தரு.

அடித்தபோது அமர்க்களமெல்லாம்
அலையகுலையவே மிக-அலையகுலையவே
அளவில்லாதசரத்தையேவி அடக்கிமுடிக்கினேன்

அர்ச்சுனன்-கந்தார்த்தம்.

நாட்டமாய்வந்து யெதிர்த்துமேமிஞ்சி
ரதகெஜதுரகமும்மடிக்ச
பாட்டனென்று பார்த்திடப்பரவும்
பலகோடிஅஸ்திரம்பிரிய
வாட்டமில்லாமல் யேவியேவிந்து
வல்லமைகண்டுமேமீறி
காட்டவேவீரியம் கடுஞ்சினமிகுத்து

அர்ச்சுனன்-தரு.

காலகாலனைப்மீரினேன் அஸ்திரங்கோடி-
கோலாகாலமாய் தூவினேன்
ஆலகாலம்போலேசீறி ஆனைசேனைதேர்பரிகள்
அத்துதலைமாய்த்திடவே ரெத்தவெள்ளம்சாய்ந்திடவே கால

வீஷ்மர்-கந்தார்த்தம்.

சாபமும்வாங்கி சரங்களையோங்கும்
தண்மையும்மெய்மரந்திடவே
கோபமாய்அதலசுதல வெட்டாமல்
கூடியேபடையெலாமடிய
பூபனேவிஜயா போர்முகமழிய
புகையிடிஅஸ்த்திரம்பெரிகி
நியர்யபகமழிந்து உங்களைஜெயிக்க,

வீஷ்மர்-தரு.

காதகாதமெங்கும்பரக்ரி சமர்விடாமல்
மோதிமோதி விழுந்திரக்க
மாதவன்மனம்துடிக்க வானவரதிசயிக்க
மாரிசரம்வாங்கிடவே வீரசூரர்தேங்கிடவே காத

கிருஷ்ணமூர்த்தி-கந்தார்த்தம்.

பரிகரிசேனையோடி பதுங்கிகெட்டலையக்கண்டேன்
அரிபதிநாமடங்க அபஜெயமடைவதாகும்
வரிசரியெடுக்கேனென்ற வாக்கையும்மரந்தேன்மிஞ்சி
சரிசரியிதோ யென்கையில்.

கிருஷ்ணமூர்த்தி-தரு.

சக்கரம்வாளியையெடுத்தேன் வீஷ்மரைக்கொல்ல
உக்ரமாகவே கடுத்தேன்
மக்கணம்செப்பவேமீறி வந்தயிந்தகிழவனையும்
மெக்கணமழியக்கொண்ணு வேருவேலைசெய்வேனென்று சக்

பொது-வசனம்.

இவ்விதமாகபகவானும் கோபமீறி வீஷ்மரைக்கொல்லும்படி சக்கரமெடுக்க அர்ச்சுனன் பகவானைப்பார்த்து யேதென்றுசொல்லுகிர விதங்காண்க.

அர்ச்சுனன்-தரு.

இந்தகோபம்வந்ததேதையா அரிகரிமுகுந்தனே
உமக்கிந்தகோபம்வந்த தேதையா
எந்தன்பாட்டனை மடிக்கத்துடிக்க
எழுந்துவும்மைநான் தழுவிப்பிடிக்க சுரு
யெதிரில்லாதவா பதரியேமனது
அதிரபூமியும் சிதரசேனைகள் இந்த

கிருஷ்ணமூர்த்தி-தரு.

சுந்திராயிதுயென்னசொல்லடா யென்னை
தொடவேண்டாம்யெட்ட நில்லடா
சந்தணன்மைந்தனே சரியென்றுபாருமல்
தள்ளியுங்களைக்கொல்ல துள்ளிவருவதென்ன சுந்

அர்ச்சுனன்-தரு.

பதரிசக்கரமெடுப்போம் சொன்னஉரிதிதவரி
பதரிசக்கரமெடுப்போம்
யெதிரியிவர்தானே யேகாந்தமாயனே
யேழையெங்களையாளும் பார்த்தனே சரு

யெடுத்தசக்கரம் ஒடுக்கப்பாட்டனை
அடுக்குமோவிதை தடுக்கலானனே . பதரி

கிருஷ்ணமூர்த்தி-தரு.

கோபமடங்கிகார்ப்பனே அவனைக்
கொல்லாமல்நானவனை விடுவனே
பூபனேநம்மிட போர்க்களம்அதமாகி
யேகியேசமர்செய்ய நோகுதேயென்னெஞ்சம் கோ

அர்ச்சுனன்-வசனம்.

அரிகரிகோபாலசூடாமணியே கோபிகாமர்த்தன சர்வஜீவ தயாபரா தாங்கள்பாரதயுத்தத்தில் ஆயுதமெடுப்பதில்லையென்று சொல்லிமரந்து யெங்கள்பாட்டன்மீதுசக்கரம் யெடுத்துவிடுவது உமக்குச்சரிதானு சொல்லும்சுவாமி.

கிருஷ்ணமூர்த்தி-தரு.

எந்தன்திருக்கரத்திலே சக்கரந்தன்னை
எடுத்துகடுத்தேன் பாரடா
உந்தன்சொல்லைகேழ்ப்பேனே ஒதும்பீசன்வந்தாலும்
உரைக்கும்வீஷ்மனைவிட்டு யிருக்கேன்பாருமடங்கி எந்
தருமன்துரியன்தன்னை சரியென்றும்பாருமலே
ஒருவன்பக்ஷமிருத்து அருவன்தனையிழக்க எந்
மடியும்தினமென்றெண்ணி மகிழ்ந்தெதிர்க்காரமாய்
முடியாப்பாரதசண்டை மூர்க்கமதையரிந்து எந்த
தண்டைவெண்டயங்கொஞ்ச தரணியளந்தபாதன்
கண்டுதேவர்துதிக்க கடிகிநடைநடந்து எந்த

பொது-கவி.

பதைத்துமேசக்கரத்தைப் பரந்தாமன்கரத்திலேந்தி
யெதிர்த்துமேநடந்துவார யிவ்வண்ணம்கண்டுயஞ்சி

மதித்துமேவில்லைவீசி மணிசித்ரரதத்தைவிட்டு
குதித்துமேயெதிர்வணங்கிக் கொண்டுமேதுதிசெய்வாரே.

பொது-வசனம்.

ஸ்ரீ கிருஷ்ணபகவானனவர் கோபமிகுந்து வீஷ்மரைக்கொல் வேனென்று சக்கரத்தை கரத்திலேந்திவர அதைக்கண்ட வீஷ்மாச் சாரியானவர் தன்அஸ்த்தத்தில்யிருந்தவில்லை பூமியிலெரிந்துவிட்டு ரதத்தைவிட்டு கீழேகுதித்து கிருஷ்ணமூர்த்தி யெதிராக நின்று வணங்கி சொல்லுகிரவிதங்காண்க.

வீஷ்மர்-தரு-ஜம்பை.

முர்கரியேயான்சருணம்-ஆதி முரகரியேயான்சருணம்
மூவுலகையுண்டமிழ்ந்த தேவதேவாயான்சருணம்
வர்சவரேகேசவனே மலைரமுடிவில்நடனமிடும்
யீசனெனுவந்தெழுந்த யிரையவனேயான்சருணம்
அக்கரையாய் தருமருக்கு அரசளிக்கயேழைமுன்னே
சக்கரமும்யேந்தயெந்தன் தவப்பலனையென்னசொல்வேன்
மின்னுமணிதிருமார்பா விண்ணுமண்ணும்தானளந்தாய்
பன்னும்திருசங்கையணி பாதமதுயான்சரும்.

வீஷ்மர்-சீசபத்தியம்.

துங்கமணிமார்பனே சோமுகசம்மாரனே
துய்யனேமெய்யனே சருணமடியேன்
கங்கையணிபாதனே கமலாதிகண்ணனே
கரிதுயர்தீர்த்தவா கோடிசருணம்
செங்கெருடன்மீதேரும் தேவதேவா
யெங்கெங்கும்யெதிரில்லா யேகவடிவே
அங்கமோயேழையின்மேல் அதிகோபம்
சங்கருசெய்வதும் தர்ம்மமிதுவோ.

வீஷ்மர்துதி-வசனம்.

சர்வஜீவகாருண்யா அகண்டபரிபூரணா யெள்ளுக்குள்யெண் ணையைப்போலவே யெங்கும்நிரைந்தபரஞ்சோதியேஒப்பற்றமுதல் வனேயெதிரில்லாதவஸ்த்துவே மேருவானது துரும்பின்மேல்யெ திர்த்துவரயிந்த அர்ப்பனனையென்னைமதித்து யென்மீதுசக்கரமெ டுக்கதர்மமாஉமதுகோபத்தை மாற்றிஅடியேனை ரக்ஷித்தருளும் கர்த்தனே.

கிருஷ்ணமூர்த்தி-கொச்சகம்.

பிரியமுடன்காக்கயனே பேர்பெரவேதான்மிகுத்து
உரியகுணமாய்துதிக்க உள்ளமதுநான்களித்தேன்
தெரியயெல்லாம்நீயேகி தேரேரிசண்டைசெய்யும்
அரியவுந்தன்சத்துருவை அழைக்கமனதாகினனே.

கிருஷ்ணமூர்த்தி-வசனம்.

அப்பாவீஷ்மனேநீரென்னை தோத்தரிக்கயெனதுகோபமாரி மனங்களித்தேன் நீரதமேரிசண்டைசெய்யவரலாம் உனக்குச்சத்துருவாகியசிகண்டியையழைத்து உன்னைக்கொல்லுகிரேன்வீஷ்மனே

பொது-வசனம்.

இப்படிபகவானனவர்வீஷ்மருக்கு சொல்லிக்கொண்டிருக்கையில் சிகண்டியானவள்ரணக்களம் வருகிரவிதங்காண்க.

சிகண்டிவருகிர-கவி.

ஆதியில்அம்பையென்னும் அரசிகாங்கயனைக்கொல்ல
தீதில்லாகாளியம்மன் திருவரம்தன்னைப்பெற்று
ஓதியேபாஞ்சாலிக்கு உடப்பிரப்பானமாயன்
சேதியைரியவேண்டி சிகண்டியும்வருகின்ருளே.



சிகண்டிவருகிர-தரு.

ஆணும்பெண்ணுமில்லாமல் அம்மைவந்துபிரந்த
அதிரூபசிகண்டிவந்தேன் திருமாயவன்முன்னே
வேதனுதனும்நம்மை வேண்டியழைத்ததென்னு சுரு

வீரியமரியவே தேரியவண்ணம்
சூரியமணிபணி மீரியேமின்ன ஆணும்

வில்லும்பாலாவும்சூலம் விருதுவெல்லாங்கொடுத்து
சொல்லும்தண்டமுமீட்டி சூரமுடன்பிடித்து சுரு

சுத்திலும்ராணுவம் பத்திமிகுத்திட
உத்தமபீஷ்மரும் பத்திமயங்கிட ஆணும்

காலணிகளுங்கொஞ்சி கனத்துகலகலென்ன
மேலணிகளுமின்ன மிகவும்பளபளென்ன சுரு

விந்தையாய்துருபதன் சிந்தையும்களித்திட
முந்தியேகவுரதர் னொந்துவொளித்திட ஆணும்

மதிக்கதுஷ்டதாய்மன் வந்தான்சிகண்டியென்று
யெதிர்க்கவீஷ்மாச்சாரியை யிதுவேதருனமென்று சுரு

யின்பமாய்மாயனும் தெம்புகள்கூர
துன்பமில்லாமலே அன்பரும்தேற ஆணும்

சிகண்டி-கவி.

உலகெலாம்குஷ்டிக்குள்ளே உகந்துகாத்தளித்ததேவா
மலரடி-அடியேன்போற்றி வரும்படி-அழைத்ததென்னு.

கிருஷ்ணமூர்த்தி-கவி.

நலமுள்ளசிகண்டிகேளாய் நல்வரமளித்தேன்நீயும்
இலகியவீஷ்மருக்கு யெதிர்நின்றுசமர்செய்வாயே.

சிகண்டி-வசனம்.

கேளுமையா சுவாமி பகவானே தங்களுடைய பாதாரவிந்தக மலங்களுக்கு அனேகவந்தனம் யென்னை அழைப்பித்தவிபரம்தெரியச்சொல்லும் கர்த்தனே.

கிருஷ்ணமூர்த்தி-வசனம்.

அகோவாரும் சிகண்டியே நீயென்னுவந்ததேயுண்டானல் சுகம்பெறக்கடவது யெழுந்திரும் உன்னை அழைத்தவிபரம் யென்னவென்றால் உனக்கு வேண்டியவரங்களை யளித்தேன் ரணக்களம்சென்று வீஷ்மருக்குயெதிர்நின்று யுத்தம்செய்து முன்னால் யேற்பட்ட சாபத்தின்படி வீஷ்மரை செயம்பெற்றுவாரும் சிகண்டியே.

சிகண்டி-வசனம்.

அப்படியேபோய்வருகிறேன் ஜெகன்னாதனேயென்று சிகண்டியானவள் பகவானிடம்விடைபெற்றுவரும்போது துரியோதனன் தம்பியாகிய துற்சாதனன் வருகிற விதங்காண்க.

துர்சாதனன்வருகிர-கவி.

எத்திசைமன்னரெல்லாம் யிடிகேட்டநாகம்போலே
சித்தமும்கலங்கிவந்து தீரனும்சிகண்டிவார
சத்தமுங்கேட்டுபாட்டன் தனக்குமேவுதவியாக
தத்தியேகிளம்பி துர்ச்சாதனன்வருகின்றனே.



துர்சாதனன்வருகிர-தரு.

மண்டலமெல்லாம்நடுங்க வந்தசுந்தீரகம்பீரன்
துண்டகன்சண்டனென்ன துர்ச்சாதனன்மேவிநான்

சித்திரச்சிலைபிடித்து சிங்கம்போல்பொங்கிமீறி
சுத்தரணசூரதீரன் துர்ச்சாதனன்மேவினான்
தட்டிபிட்டுசங்குவிட்டு தவளமணிதேரிலேரி
யெட்டிரதம்தன்னைவிட்டு யெங்குமஞ்சமேவினான்
படைதிடமாய்மிஞ்டவே பாட்டனுக்குதவியாக
தடையில்லாமல்துர்ச்சாதனன் சமர்புரியமேவினான்

பொது-வசனம்.

இப்படி துர்ச்சாதனன் பாட்டனுகியபீஷ்மாச்சாரியைக் கண்டு யிருக்க சிகண்டியானவள் பீஷ்மரைக்கண்டு யெதிர்த்து யுத்தம்செய்கிர விதங்காண்க.

சிகண்டி-கந்தார்த்தம்.

வல்லவீஷ்மனையும் கொல்லுவேனென்று
சொல்லியே சிகண்டி.

சிகண்டி-தரு.

வில்லதுகரத்திலெடுத்தேன் கனிந்துமந்ரம்
சொல்லியேசரத்தைவிடுத்தேன்
நல்லதுநல்லதுவுன்னை நாடிநமன்தேடிவர
நாட்டங்கொண்டுநானெதிர்த்து வாட்டவேமனம்பதைத்து வில்

வீஷ்மர்-தரு.

அர்ப்பனும்சிகண்டிமுன்னேயெப்படியெதிர்ப்பதென்று
ஆயுதங்கைசோரவிட்டேனே யிதர்கென்னசெய்வேன்
ஆயுதங்கைசோரவிட்டேனே
அம்பையானமாதுயென்னை உம்பர்களுலகம்சேர்க்க
யின்பசிகண்டியாய்வந்த வம்புக்காரியாச்சேயிந்த-அர்ப்
தேவர்மானிடர்க்கெல்லாம் தீரம்பெற்றேனேமிக்க
தேவாஅரிமுகுந்தா நானென்னசெய்குவேன்
தேவாஅரிமுகுந்தா
சித்தமாகுதையோயென்மேல் யுத்தம்செய்யவேநானும்
மெத்தவீரதீரனென்றுபேர் பெற்றகீர்த்தியும்போமே-அர்ப்
சொல்லும்அம்மையிப்படி கொல்லவந்தாளேபாவி
சோங்கிதேங்கிடலாச்சே நானென்னசெய்வேன்
சோங்கிதேங்கிடலாச்சே

சூரதீரன்கையால்பட்டு பேரும்பெரிகிடாமல்
நாரியிவளால்பட்டேனென்று கூரவும்யேளிதமாச்சே அர்

சிகண்டிவில்லெடுக்கநான் வெகுண்டுவில்லெடுக்காமல்
தேங்கித்திகைக்கலாச்சுதே நானென்னசெய்வேன்
தேங்கித்திகைக்கலாச்சுதே சுரு

தேடிசிகண்டிபாணம் நாடிமடித்திடாமல்
கூடியவிஜயன்பாணம் கொல்லநாடிவந்துகாரும் அர்ப்

பொது-வசனம்.

இப்படிவீஷ்மாச்சாரி மயங்கியிருக்க சிகன்டிபானவள் பாணம் தொடுக்கிர விதங்காண்க.

சிகண்டி-தரு.

வில்லையெடுத்தேன்பாரிதோ வீஷ்மாச்சாரியே
வீரியமரியவே சரமதுவருகுது
மீரியெல்லையெங்குமே நடுங்கிவாட
எதிர்த்தசேனைகள் பரந்துவோடவே
சொல்லுமுன்னமே கபந்தமாடவே
சோணமாரிபோல் மிகுந்துசாடவே வில்

பொது-வசனம்.

இப்படியாக சிகண்டிபாணம் தொடுக்க வீஷ்மர் மவுனமாக யிருக்க துர்ச்சாதனன் யெதிர்த்து யேதென்றுசொல்லுகிர விதங் காண்க.

துர்ச்சாதனன்-தரு.

துண்டசிகண்டியும்மீரிவந்திட கண்டேனே
துர்ச்சாதனனிதோவந்து யெதிர்த்துகொண்டேனே சுரு

துண்டந்துண்டமாய் வில்லையெடுக்கவும்
சூரசாரதி விழஅடிக்கவும்
கண்டதுண்டமாய் உன்னைமடிக்கவும்
கடிந்தகூரியே சொல்லிமுடிக்கவும் துண்

சிகண்டி-தரு.

வீரம்பேசியேவந்திடும் துர்ச்சாதனனே
வீஷ்மருக்குமிஞ்சிய வீரனே சுரு

சூரம்பேசியே குதித்துமீரியே
துணிந்துவந்தாயே யெமகிரிசேரவே
பாரும்பாரடா பதுங்கியோடவே
படைகளுமடியவே ஜெயங்கள்கூறியே வீரம்

துர்ச்சாதனன்-தரு.

கத்தவித்தைதகள்காட்டி குதிக்கவும்கண்டேனே
கண்டிக்கும்படி பாணமெடுத்துக்கொண்டேனே சுரு

மெத்தவேமதம் — கொள்ளாதே
வீரசூரமும் விள்ளாதே
சற்றும்யென்மொழி தள்ளாதே
சாகநேரும்நீ துள்ளாதே கத்த

சிகண்டி-தரு.

காலகாலனும்நடுங்க மீரியேவந்தேனே
கரிபரிசேனையை யெமனுக்கிறைதந்தேனே சுரு

சாலமில்லாமலே உந்தனைவாட்டவே
சவுரியவீரமும் மிகுத்துகாட்டவே
கோலமாசரதம் பின்னிட்டோடவே
குவலயமெங்கும் யென்கொடிநாட்டவே கால

துர்ச்சாதனன்-கவி.

வீரியசிகண்டிவுந்தன் விகாரபேதத்தைதகாட்டி
பாரியதனுவெடுத்து பாட்டனைமதிப்பில்லாமல்
மீரியேவந்தவுந்தன் விருதெல்லாம்வெட்டிக்கிட்டி
கூரியபாணத்தாலே கொல்லவும்தேரினேனே.

துர்ச்சாதனன்-வசனம்.

அடிசிகண்டியே நீஆணும் பெண்ணுமல்லாத விகாரரூபத்தைக்காட்டியெனது பாட்டனை மதிக்காமல்வந்தெதிர்த்த உன்னுடைய விருதுகளெல்லாம் துமிஷப்படுத்திகொல்ல வந்தேன்வாரும் சிகண்டியே.

சிகண்டி-தரு.

சொல்லுமெந்தன் தமக்கைதன்னை துயிலுரிந்தபாவிவுன்னை
துண்டந்துண்டமாகவெட்டி துனிக்காமல்விடுவேனே

துர்ச்சாதனன்-தரு.

விடுவதுண்டோவென்றெதிர்த்து படுவாவிநீபதைத்து
வீரியனேமாளவந்த வேளையதுபிசகாது

சிகண்டி-தரு.

காதலுடன் தனுவாங்கி சோதிபெரும்கணை தாங்கி
கண்டதுண்டம்செய்திடவே கடிகிவரவிட்டேனிதோ

துர்ச்சாதனன்-தரு.

விட்டசரம்பொடிபடவே கெட்டுபடைமுரிபடவே
மிக்கபயங்கொண்டோட வெத்திசங்கம்தொனித்தேனே

பொது-வசனம்.

இப்படியாகசிகண்டி படைமுரிந்தோட அப்போது கிருஷ்ண மூர்த்திசொல்லுகிற விதங்காண்க.

கிருஷ்ணமூர்த்தி-தரு.

ஓடோடிபதுங்காதே மிஞ்சிசிகண்டியே
அஞ்சியேவாடாதே ஓடோடிபதுங்காதே
நாடாதசிகண்டியை நடத்திமுன்னேநிருத்தி
நல்லவிசயபூபா கொல்லும்கொல்லும்வீஷ்மரை ஓ

அர்ச்சுனன்-தரு.

சரிசரியிதுதானோ கரியமேனியனே
அரிகரிமுகுந்தா சரிசரியிதுதானோ
ஒருவருடனேசண்டை யிருவர்செய்திடலாமோ
வருமோமனதெனக்கு வாசுதேவாதிதேவா சரி

கிருஷ்ணமூர்த்தி-தரு.

இடறொன்றும்நினைக்காதே அண்டியசிகண்டியை
சண்டைசெய்யவே இடறொன்றும்நினைக்காதே
தொடரும்மைத்துனன்முன்னே சுருக்காவீஷ்மரைக்கொல்ல
சோரும்துரியன்சேனை பாரும்நமக்கிடல்ல இட

அர்ச்சுனன்-தரு.

இதுவென்னபாதகமோ பாட்டனைக்கொல்லவே
நாட்டமுமாகவே இதுவென்னபாதகமோ
மெதுவானமிருந்தாலே வெல்லமுடியாதென்று
வீரம்மிகுத்துரதம் விட்டுவில்லையெடுத்தேன் இது

கிருஷ்ணமூர்த்தி-வசனம்.

அப்பாசிகண்டியேயென்னைபின்விட்டு நீமுன்னிட்டுவீஷ்மறை யெதிர்த்துநடவும்மைத்துனு.

அர்ச்சுனன்-தரு.

சிகண்டிவிசயநாங்கள் வெகுண்டுவில்லைவளைத்து
சித்திரமுகபாணமெடுத்தோம் வீஷ்மனேவுன்னை
வெற்றிசெய்யமீறி விடுத்தோம்

வீஷ்மர்-தரு.

துர்க்குணசிகண்டிபின்னே பற்குணன்வந்ததுகண்டு
சூரமாகவில்லையெடுத்தேன் துரியன்சேனை
தெம்புகள்போக்கவே விடுத்தேன்

துர்ச்சாதனன்-தரு.

விட்டபோதுதுர்ச்சாதனன் கிட்டிவீஷ்மர்தன்னுடனே
விண்டலம்நிரையவிடுத்தான் சரங்கள்கோடி
அண்டரும்நடுங்கத் தொடுத்தான் விட்

வீஷ்மர்-தரு.

யீடில்லாபாணங்களெல்லாம் ஓடியேசுழன்றுவிழ
யெண்ணியேசரத்தையெடுத்தார் சிகண்டிதன்னை
பின்னிடும்படியே யடித்தார்

அர்ச்சுனன்-தரு.

பின்னிடும்சிகண்டிதன்னை மின்னிடும்படிக்கிசெய்து
பேரிடிபாணங்களெடுத்தார் நிலைகலங்க
பேரிடிபோலவே தொடுத்தார்

வீஷ்மர்-தரு.

பேரிடிபோலவேயானை வீரிடமுரசுபேரி
யெத்திசைகளெங்கும்நிரைய சரமெடுத்து
பத்திவிடவெங்கும் நிறைய

அர்ச்சுனன்-கந்தார்த்தம்.

அண்டரெண்டபுவனமெங்கும் நிரையபாணம்
அடிக்கடியேவீஷ்மருமே விட்டபோது
கண்டுமனங்கெடுத்து கோபமீறி
காலனந்தருத்திரனும் கலங்கிவாட

மண்டலமும்நடுநடுங்க சமர்களத்தில்
வந்தபெருஞ்சேனை மன்னர்மயங்கிவாட
சண்டனென்ன அண்டியெந்தன் பாட்டனாரும்.

அர்ச்சுனன்-தரு.

சாய்ந்திடபாணத்தாலடித்தேன் அமர்களத்தில்
ஒய்ந்திடசெயபேர் யெடுத்தேன்
பாய்ந்தபாணங்களெல்லாம் பார்த்துதுரியருஜன்
பத்திபத்தியாகச்சேனை வந்துமேபரதவிக்க சாய்

பொது-வசனம்.

இப்படிவிசயருஜன்பாணத்தைவிட்டுபூமியின்மீதுவீஷ்மர்மூர்ச்சித்திருக்க துரியோதனன்முதலான யாவருங்கண்டு புலம்புகிறவிதங்காண்க.

துரியன்-கவி.

என்னிடதந்தையாரை யீன்றயென்பாட்டனாரே
முன்னிடும்பகைதுலைத்து முடிசூட்டிவைப்பீரென்று
பின்னிடாதிருந்தயென்னை பேயநாய்தவிக்கவிட்டு
உன்னிடநிலைசாய்ந்தாயோ ஓகோநானென்னசெய்வேன்.

துரியன்புலம்பல்-தரு.

தாதாவேயென்னசெய்வேன் யிப்போ
சாய்ந்திங்கே சோர்ந்திடவே
ஓதும்கல்விகளெல்லாம் தெளிந்தவா
உயிரையிழந்த ணேயோ
தெம்பாகவந்தேதனையோ யெனக்கு
ஜெயம்தந்து ரக்ஷிப்பீரென்று
நம்பினயெங்களை கட்டாத்தில்விட்டீரோ
நானென்னசெய்வ ணேயோ
தந்தைமனங்களிக்க நல்ல
தரணிப்பொன் ஞைவிட்டு
விந்தைபரிமள கந்தியுந்தந்தவர்
விழுந்தீரோ வீரியனே
அங்கம்துடிக்கு தையோ
அய்யாவே நீர்மடிய
யெனக்குஜெயம் கொடுப்பீரையோ
யெப்படிநான் தணிவேன்

வீஷ்மர்-கலி.

அப்பனே துரியபூபா அவரவர்க்கமைந்ததொன்றும்
தப்பியேகடப்பதுண்டோ தாக்கிய அம்பைப்பார்க்க
செப்பியவிசயன்பேரை தெரிந்துமேமரந்தேனுனும்
மிப்படிஆறுமாதம் மிருக்கும்நீர்நடத்துவீரே.

வீஷ்மர்-வசனம்.

அப்பா துரியோதனா அவாளவாள்வந்த விதிப்படி நடவாது என் தந்தைவரத்தினலே சூரியன் தக்ஷணாயணம்விட்டு உத்திராயணபுண்ணியகாலம் வருமளவும் உயிர்வைத்திருக்கப் போகிறேன் யெனக்கு தாகத்துக்குஜலமும் குளிர்ந்தகாற்றும் வெய்யலுரைக்காமல் மணிமண்டபமும் நான்சயனித்துக்கொள்ள யிடமும் யேற்படுத்திவையுமப்பா துரியோதனா.

துரியன்-வண்ணத்தரு.

உத்தமயென்தம்பிமாரே ஒருவனோடி தீர்த்தமும்
மற்றவர்கள்ரத்தினத்தால் மண்டபமுண்டாக்கவே
சித்திரமாகவேலைசெய்யும் சிப்பியைக்கொண்டோடியே
சத்தும்தடையத்துமிங்கே சல்தியாகவருவீரே

துரியன்-வசனம்.

வாருங்கள் தம்பிமார்களே நீங்கள் வொருவனோடி பாட்டன் தாகந்தீரும்படியாக தீர்த்தமும் மற்றவர்களோடி பாட்டனார் உயிர்வைத்திருக்கும்படி சிங்காரமண்டபமும் பஞ்சணைமெத்தை முதலானதும் செய்விக்கும்படி வேலைக்காரருடனே சிற்பாசாஸ்திரிகளை சீக்கிரம் அழைப்பியும் தம்பிமார்களே அப்போது அர்ச்சுனன் யேதென்றுசொல்வது.

அர்ச்சுனன்-கந்தார்த்தம்.

ஒருமாதம்முடிக்கும்வேலை ஒருக்ஷணமுடிப்பேனென்று
ஒருபாணமெடுத்தால்காய ஒருஜலமளித்தேன்பாரும்
ஒருபாணத்தாலேரத்ன உருவாய்மண்டபங்கள்தந்தேன்
ஒருபாணம் சயனம்செய்ய.

அர்ச்சுனன்-தரு.

உன்னிதமெத்தையுமளிக்க பாலவிதமாக
என்னிடதாதாவும் களிக்க

சொன்னளவிலுன்னுமணி சொர்ணமயமாய்ஜொலிக்க
மின்னுமணிமாயனாலே வேண்டியதபம்பலிக்க-உன்னி

அர்ச்சுனன்-கவி.

இப்படிமுடிக்கப்பார்த்தன் யிடையவேதுரியனுதி
ஒப்பில்லாமன்னமன்னர் உம்பருமதிசயித்து
கொப்பெனபுஷ்ப்பமாரி குமுகுமென்றேசொரிந்து
தப்பில்லாஜெயங்கள்கூறி தங்கள்தன்பதிசேர்ந்தாறே.

பொது-வசனம்.

வீஷ்மாச்சாரியானவர் துரியோதனனைக் கேட்டுக்கொண்டபடி அர்ச்சுனமகாராஜன் ஒருபாணத்தைவிட்டு அவர் பொசிக்கும்படி யானசலமும் சயனித்துக்கொள்ள பஞ்சணைமெத்தையும் அலங்கார மண்டபமும் உண்டாகும்படி அர்ச்சுனன்செய்ய துரியோதினாதிகள் பின்னிடைந்தார்கள்.

பொது-கவி.

கண்டுஇவ்வண்ணமெல்லாம் காங்கேயன்மகிழ்ந்துமின்பம்
கொண்டுமேசுகித்திருக்க கொற்றவரெல்லாம்துன்பம்
விண்டுபாசரையைச்சேர்ந்தார் விளம்பியகதையைக்கேட்டோர்
பண்டுபாபங்கள்நீங்கி பரகதிசேர்வார்தாமே.

மங்களம்-மங்களம்-பவந்துதே-மங்களம்.

பத்தாநாள்யுத்தமாகிய

# வீஷ்மர்சண்டை நாடகம்

முற்றிற்று.



